தில்லையில் அருளிய

# திருப்பொன்னூசல்

## அருட்சுத்தி

ஒப்புமை பற்றி வந்த

ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை யேறி யினிதமர்ந்து
நாரா யணனறியா நாண்மலர்த்தா ணாயடியேற்
கூராகத் தந்தருளு முத்தர கோசமங்கை
ஆரா வமுதி னருட்டா ளிணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூச லாடாமோ.

மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்றங்கு தேவர்களுங் காணா மலரடிகள்
தேன்றங்கித் தித்தித் தமுதூறித் தான்றெளிந்தங்
கூன்றங்கி நின்றுருக்கு முத்தர கோசமங்கைக்
கோன்றங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூச லாடாமோ.

முன்னீறு மாதியு மில்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி யிமையோர்கள் தாம்நிற்பத்

தன்னீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி யுத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. ௩

நஞ்சமர் கண்டத்த னண்டத் தவர்நாதன்
மஞ்சுதோய் மாடமணி யுத்தர கோசமங்கை
அஞ்சொலாள் தன்னோடுங் கூடி யடியவர்கள்
நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்
புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூச லாடாமோ. ௪

ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர்
காணாக் கடவுள் கருணையினாற் றேவர்குழாம்
நாணாமே யுய்யவாட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக வுண்டருளு முத்தர கோசமங்கைக்
கோனார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூச லாடாமோ. ௫

மாதாடு பாகத்த னுத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையா னடியாருட்
கீதாட்டி நாயேனை யாட்கொண்டு டென் தொல்பிறவித்
தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் களிந்தன்பாற்
போதாடு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ.

உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் றன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி யாடுமணி மயில்போல்
என்னத்த னென்னையுமாட் கொண்டா னெழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. எ

கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால வமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து
ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்
சீலந் திகழுந் திருவுத்தர கோசமங்கை
மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்
பூலித் தகங்குழைந்து பொன்னூச லாடாமோ. அ

தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொள்வான்
பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ.

திருச்சிற்றம்பலம்.

தில்லையில் அருளிய

# அன்னைப் பத்து

## ஆத்தும பூரணம்.

திருச்சிற்றம்பலம்

வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையின ரன்னே யென்னும்
நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கு
நாதரிந் நாதனா ரன்னே யென்னும்.

கண்ணஞ் சனத்தர் கருணைக் கடலினர்
உண்ணின் றுருக்குவ ரன்னே யென்னும்
உண்ணின் றுருக்கி யுலப்பிலா ஆனந்தக்
கண்ணீர் தருவரா லன்னே யென்னும்.

நித்த மணாளர் நிரம்ப வழகியர்
சித்தத் திருப்பரா லன்னே யென்னுஞ்
சித்தத் திருப்பவர் தென்னன் பெருந்துறை
அத்தரா னந்தரா லன்னே யென்னும்.

ஆடரப் பூணுடைத் தோல்பொடிப் பூசிற்றோர்
வேட மிருந்தவா றன்னே யென்னும்

வேட மிருந்தவா கண்டுகண் டென்னுள்ளம்
வாடு மிதுவென்னே யன்னே யென்னும்.

நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்
பாண்டிநன் னாடரா லன்னே யென்னும்
பாண்டிநன் னாடர் பரந்தெழு சிந்தையை
ஆண்டன்பு செய்வரா லன்னே யென்னும். ௬

உன்னற் கரியசீ ருத்தர மங்கையர்
மன்னுவ தென்னெஞ்சி லன்னே யென்னும்
மன்னுவ தென்னெஞ்சின் மாலயன் காண்கிலார்
என்ன அதிசய மன்னே யென்னும்.

வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிரு முண்டத்தர்
பள்ளிக்குப் பாயத்த ரன்னே யென்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரி மேல்கொண்டென்
உள்ளங் கவர்வரா லன்னே யென்னும். ௭

தாளி யறுகினர் சந்தனச் சாந்தினர்
ஆளெம்மை யாள்வரா லன்னே யென்னும்
ஆளெம்மை யாளு மடிகளார் தங்கையில்
தாள மிருந்தவா றன்னே யென்னும். ௮

தையலோர் பங்கினர் தாபத வேடத்தர்
ஐயம் புகுவரா லன்னே யென்னும்
ஐயம் புகுந்தவர் போதலு மென்னுள்ளம்
நையுமி தென்னே யன்னே யென்னும். ௯

கொன்றை மதியமுங் கூவிள மத்தமும
துன்றிய சென்னிய ரன்னே யென்னும்
துன்றிய சென்னியின் மத்தமுன் மத்தமே
இன்றெனக் கானவா றன்னே யென்னும். கo

திருச்சிற்றம்பலம்.

தில்லையில் அருளிய

# குயிற் பத்து

## ஆத்தும விரக்கம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

கீத மினிய குயிலே கேட்டியே லெங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவிற் பாதாள மேழினுக் கப்பாற்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்றதொன்மை
ஆதிகுண மொன்று மில்லா னந்தமிலான் வரக்கூவாய். க

ஏர்தரு மேழுல கேத்த வெவ்வுரு வுந்தன் னுருவாம்
ஆர்கலி சூழ்தென் னிலங்கை யழகமர் வண்டோ தரிக்குப்
பேரரு ளின்ப மளித்த பெருந்துறை மேய பிரானைச்
சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய். உ

நீல வுருவிற் குயிலே நீண்மணி மாட நிலாவுங்
கோல அழகிற் றிகழுங் கொடிமங்கை யுள்ளுறை கோயிற்
சீலம் பெரிது மினிய திருவுத் தரகோச மங்கை
ஞாலம் விளங்க விருந்த நாயக னைவரக் கூவாய்.

தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயி லேயிது கேள்நீ
வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட வள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென் னுணர்வது வாயவொருத்தன்
மான்பழித் தாண்டமென் னோக்கி மணாளனை நீவரக் கூவாய்.

சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசை யறுப்பான்
முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய். ரு

இன்பந் தருவன் குயிலே யேழுல கும்முழு தாளி
அன்ப னமுதளித் தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய்.

உன்னை யுகப்பன் குயிலே யுன்றுணைத் தோழியு மாவன்
பொன்னை யழித்தநன் மேனிப் புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய்.

வாவிங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் தேடி
ஓவியவ ருன்னி நிற்ப வொண்டழல் விண்பிளந் தோங்கி

மேவியன் றண்டங் கடந்து விரிசுட ராய்நின்ற மெய்யன்
தாவி வரும்பரிப் பாகன் தாழ்சடை யோன்வரக் கூவாய். ௮

காருடைப் பொன்றிகழ் மேனிக் கடிபொழில் வாழுங் குயிலே
சீருடைச் செங்கம லத்திற் றிகழுரு வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாச மறுத்தெனை யாண்ட
ஆருடை யம்பொனின் மேனி யமுதினை நீவரக் கூவாய். ௯

கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயி லேயிது கேள்நீ
அந்தண னாகிவந் திங்கே யழகிய சேவடி காட்டி
எந்தம ராமிவ னென்றிங் கென்னையு மாட்கொண் டருளுஞ்
செந்தழல் போற்றிரு மேனித் தேவர் பிரான்வரக் கூவாய். ௧௦

திருச்சிற்றம்பலம்.

தில்லையில் அருளிய

# திருத்தசாங்கம

## அடிமை கொண்ட முறைமை.

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமந் தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரா னென்று. க

ஏதமிலா இன்சொல் மரகதமே யேழ்பொழிற்கும்
நாதனமை யாளுடையா னாடுரையாய்—காதலவர்க்
கன்பாண்டு மீளா அருள்புரிவா னாடென்றுந்
தென்பாண்டி நாடே தெளி. உ

தாதாடு பூஞ்சோலைத் தத்தாய நமையாளும்
மாதாடும் பாகத்தன் வாழ்பதியென்—கோதாட்டிப்
பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்
உத்தர கோசமங்கை யூர். ங

செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீநஞ் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையா னாறுரையாய்—தையலாய்

வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காணுடையா னாறு.

கிஞ்சுகவா யஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவு மலைபகராய்—நெஞ்சத்
திருளகல வாள்வீசி யின்பமரு முத்தி
அருளுமலை யென்பதுகா ணய்ந்து. ரு

இப்பாடே வந்தியம்பு கூடுபுக லென்கிளியே
ஒப்பாடாச் சீருடையா னூர்வ தென்னே—யெப்போதுந்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண்ணேத்திசைப்ப
வான்புரவி யூரு மகிழ்ந்து. சு

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய்—ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயுங்
கழுக்கடைகாண் கைக்கொள் படை. எ

இன்பால் மொழிக்கிள்ளா யெங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கு முரசியம்பாய்—அன்பாற்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கு
பருமிக்க நாதப் பறை. அ

ஆய மொழிக்கிள்ளா யள்ளூறு மன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தாரென்—தீயவினை
நாளுமணு காவண்ண நாயேனை யாளுடையான்
தாளியறு காமுவந்த தார். கூ

சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி யேர்காட்டுங்
கோதிலா ஏறாங் கொடி. ௨0

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# திருப்பள்ளியெழுச்சி

## திரோதான சுத்தி.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

**போ**ற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோஞ்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

அருணனிந் திரன்றிசை யணுகின னிருள்போய்
அகன்றது வுதயநின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரிய னெழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணார்
திரணிரை யறுபத முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
அருணிதி தரவரு மானந்த மலையே
அலைகட லேபள்ளி யெழுந்தரு ளாயே. ௨

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுக ளியம்பின வியம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழற் றாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரு மறிவரி யாயெமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

இன்னிசை வீணைய ரியாழின ரொருபால்
இருக்கொடு தோத்திர மியம்பின ரொருபால்
துன்னிய பிணைமலர்க் கையின ரொருபால்
தொழுகைய ரழுகையர் துவள்கைய ரொருபால்
சென்னியி லஞ்சலி கூப்பின ரொருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையு மாண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

பூதங்கள் தோறுநின் றாயெனி னல்லாற்
போக்கிலன் வரவில னெனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுத லாடுத லல்லாற்
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்மரி யாயெங்கள் முன்வந்
தேதங்க ளறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. ௫

பப்பற வீட்டிருந் துணருநின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றாரணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. ௬

அதுபழச் சுவையென அமுதென அறிதற்
கரிதென எளிதென அமரரு மறியார்
இதுவவன் றிருவுரு இவனவ னெனவே
யெங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. ௭

முந்திய முதல்நடு இறுதியு மானாய்
மூவரு மறிகில ரியாவர்மற் றறிவார்
பந்தணை விரலியு நீயுநின் னடியார்
பழங்குடில் தொறுமெழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. அ

விண்ணகத் தேவரு நண்ணவு மாட்டா
விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. க

புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவு மலரவ னாசைப்
படவுநின் னலர்ந்தமெய்க் கருணையு நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. க0

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# கோயின் மூத்த திருப்பதிகம்

## அநாதியாகிய சற்காரியம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

உடையா ளுன்ற னடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன்
அடியார்நடுவுளிருக்குமருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே. க

முன்னின்றாண்டாயெனை முன்னமியானுமதுவேமுயல்வுற்றுப்
பின்னின்றேவல்செய்கின்றேன்பிற்பட்டொழிந்தேன்பெம்மா
என்னின் றருளி வரநின்று போந்தி டென்னா விடிலடியார் [னே
உன்னின்றிவனாரென்னாரோபொன்னம்பலக்கூத்துகந்தானே. உ

உகந்தானேயன்புடையடிமைக்குருகாவுள்ளத்துணர்விலியேன்
சகந்தா னறிய முறையிட்டாற் றக்க வாறன் றென்னாரோ
மகந்தான் செய்து வழிவந்தார் வாழ வாழ்ந்தா யடியேற்குன் [லே.
முகந்தான்றாராவிடின்முடிவேன்பொன்னம்பலத்தெம்முழுமுத

முழுமுத லேயைம் புலனுக்கு மூவர்க்கு மென்ற னக்கும்
வழிமுத லேநின் பழவடி யார்திரள் வான் குழுமிக்

கெழுமுத லேயருள் தந்திருக்க இரங்குங் கொல்லோ வென்
றழுமதுவேயன்றிமற்றென்செய்கேன்பொன்னம்பலத்தரைசே

அரைசேபொன்னம் பலத்தாடுமமுதே யென் றுன்னருணோக்கி
இரைதேர்கொக்கொத் திரவுபகலேசற் றிருந்தேவேசற்றேன்
கரைசேரடியார் களிசிறப்பக்காட்சி கொடுத்துன்னடியேன்பாற்
பிரைசேர்பாலி னெய்போலப்பேசா திருந்தா லேசாரோ. ரு

ஏசா நிற்ப ரென்னையுனக் கடியா னென்று பிறரெல்லாம்
பேசா நிற்ப ரியான்தானும் பேணா நிற்பே னின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோ லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடு மெந்தா யினித்தா னிரங்காயே.

இரங்கு நமக்கம் பலக்கூத்த னென்றென் றேமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டா யாள்வா ரிலிமா டாவேனோ
நெருங்கு மடியார் களுநீயு நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரவெங்கள் வாழ்வே வாவென் றருளாயே. எ

அருளாதொழிந்தாலடியேனையஞ்சேலென்பாராரிங்குப் [த்தா
பொருளாவென்னைப்புகுந்தாண்டபொன்னேபொன்னம்பலக்கூ
மருளார்மனத்தோடுனைப்பிரிந்துவருந்துவேனைவாவென் றுன்
தெருளார்கூட்டங்காட்டாயேற்செத்தேபோனாற்சிரியாரோ. அ

சிரிப்பார்களிப்பார்தேனிப்பார்திரண்டுதிரண்டுன்றிருவார்த்தை
விரிப்பார்கேட்பார்மெச்சுவார்வெவ்வேறிருந்துன்திருநாமந்
தரிப்பார்பொன்னம்பலத்தாடுந்தலைவாவென்பாரவர்முன்னே
நரிப்பாய்நாயேனிருப்பேனோநம்பியினித்தானல்காயே. கூ

நல்கா தொழியா னமக்கென்றுன் னுமம் பிதற்றி நயனநீர்
மல்காவாழ்த்தா வாய்குழறா வணங்கா மனத்தா லினைந்துருகிப்
பல்கா லுன்னைப் பாவித்துப் பாவிப்பொன்னம் பலமென்றே
ஒல்கா நிற்குமுயிர்க்கிரங்கி யருளா யென்னை யுடையானே.க0

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# கோயிற் றிருப்பதிகம்

## அனுபோக இலக்கணம்

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த
இன்பமே யென்னுடை அன்பே.

அன்பினா லடியே னாவியோ டாக்கை
யானந்த மாய்க் கசிந் துருக
என்பர மல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனோர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பும் முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே. ௨

அரைசனே யன்பர்க் கடியனே னுடைய
அப்பனே யாவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே
யானுன்னை யுரைக்குமா றுணர்த்தே. ௩

உணர்ந்தமா முனிவ ரும்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா வுயிர்கட்கு முயிரே
யெனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே
திணிந்ததோ ரிருளிற் றெளிந்தது வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கடா மில்லா இன்பமே யுன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே.

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறா நீர்போற் சிந்தைவாய்ப் பாயுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்
இனியுன்னை யென்னிரக் கேனே. ௬

இரந்திரந் துருக என்மனத் துள்ளே
யெழுகின்ற சோதியே யிமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்தவா காய நீர்நிலந் தீகால்
ஆயவை யல்லையா யாங்கே
கரந்ததோ ருருவே களித்தன னுன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே.

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே. ௭

பார்பதம் அண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதே லரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரய லுள்ளார்
ஆனந்த மாக்குமென் சோதி. ௮

சோதியாய்த் தோன்று முருவமே யருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே யந்தமே பந்தம்
அறுக்குமா னந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் னிணையடி தந்தே. ௯

தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பாற்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா வுடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனோர்கைம் மாறே. ௧௦

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# செத்திலாப் பத்து.

---

## சிவானந்தம் அளவறுக் கொணாமை.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பொய்யனே னகநெகப் புகுந்தமு தூறும்
　　புதுமலர்க் கழலிணையடி பிரிந்துங்
கையனே னின்னுஞ் செத்திலே னந்தோ
　　விழித்திருந் துள்ளக் கருத்தினை யிழந்தேன்
ஐயனே யரசே யருட்பெருங் கடலே
　　யத்தனே யயன் மாற்கறி யொண்ணாச்
செய்யமே னியனே செய்வகை யறியேன்
　　திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
　　யுண்டியா யண்ட வாணரும் பிறரும்
வற்றி யாருநின் மலரடி காணா
　　மன்ன வென்னையோர் வார்த்தையுட் படுத்துப
பற்றி னாய் பதையேன்மனமிக வுருகேன்
　　பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்
செற்றி லேனின்னுந் திரிதரு கின்றேன்
　　திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. ௨

புலைய னேனையும் பொருளென நினைந்துன்
அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்
தலையி னடைந் தேன்விடைப் பாகா
சங்கரா எண்ணில் வானவர்க் கெல்லாம்
நிலைய னேயலை நீர்விட முண்ட
நித்த னேயடை யார்புர மெரித்த
சிலைய னேயெனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

அன்ப ராகிமற் றருந்தவ முயல்வார்
அயனு மாலுமற் றழலுறு மெழுகாம்
என்ப ராய்நினை வாரெ னைப்பலர்
நிற்க விங்கெனை யெற்றினுக் காண்டாய்
வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை
மரக்க ணென்செவி யிரும்பினும் வலிது
தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐயனே யென்றுன் னருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரு நாடரும் பொருளே
நாத னேயுனைப் பிரிவுறா அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர்பிரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே

அறுக்கி லேனுடல் துணிபடத் தீப்புக்
    கார்கி லேன்றிரு வருள்வகை யறியேன்
பொறுக்கி லேனுடல் போக்கிடங் காணேன்
    போற்றி போற்றியென் போர்விடைப் பாகா
இறக்கி லேனுனைப் பிரிந்தினி திருக்க
    என்செய் கேனிது செய்கவென் றருளாய்
சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்
    திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

மாய னேமறி கடல்விட முண்ட
    வான வாமணி கண்டத்தெம் மமுதே
நாயி னேனுனை நினையவு மாட்டேன்
    நமச்சி வாயவென் றுன்னடி பணியாப்
பேய னாகிலும் பெருநெறி காட்டாய்
    பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னாகிநின் றலறுவ தழகோ
    திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. ௭

போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
    புரந்த ராதிகள் நிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
    குறிக்கொள் கென்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
    அடிய னேனிடர்ப் படுவது மினிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
    திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

ஞால மிந்திர னான்முகன் வானவர்
நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்
கால னாருயிர் கொண்டபூங் கழலாய்
கங்கை யாயங்கி தங்கிய கையாய்
மாலு மோலமிட் டலறுமம் மலர்க்கே
மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்
சேலு நீலமு நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

அளித்து வந்தெனக் காவவென் றருளி
அச்சந் தீர்த்தநின் னருட்பெருங் கடலில்
திளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவ னறியா
வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே. ௫0

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# அடைக்கலப் பத்து

## பக்குவ நிண்ணயம்.

கலவைப்பாட்டு

### திருச்சிற்றம்பலம்

செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந் தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்குமனத் தடியே னுடையாயுன் னடைக்கலமே. க

வெறுப்பன வேசெய்யுமென் சிறுமையைநின் பெருமையினாற்
பொறுப்பவ னேயராப் பூண்பவ னேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவ னேநின் திருவரு ளாலென் பிறவியைவேர்
அறுப்பவ னேயுடை யாயடி யேனுன் னடைக்கலமே. உ

பெரும்பெரு மானென் பிறவியைவே ரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெரு மானென் மனத்தினுள்ளே
வரும்பெரு மான்மல ரோனெடு மாலறி யாமனின்ற
அரும்பெரு மானுடை யாயடி யேனுன் னடைக்கலமே.

பொழிகின்ற துன்பப் புயல்வெள் ளத்தினின் கழற்புணைகொண்
டிழிகின்ற அன்பர்கள் ஏறினர் வான்யா னிடர்க்கடல்வாய்ச்

சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுறவெறிய
அழிகின் றனனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ச

சுருள்புரி கூழையர் சூழலிற் பட்டுன் திறமறந்திங்
கிருள்புரி யாக்கையி லேகிடந் தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மானன்ன நோக்கிதன் பங்கவிண் ணோர்பெருமான்
அருள்புரி யாயுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ரு

மாழைமைப் பாவிய கண்ணியர் வன்மத் திடவுடைந்து
தாழியைப் பாவு தயிர்போற் றளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழியெப் போதுவந் தெந்நாள் வணங்குவன் வல்வினையேன்
ஆழியப் பாவுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௬

மின்கணி னார்நுடங் கும்இடையார் வெகுளிவலையி லகப்பட்டுப்
புன்கணனாய்ப் புரள்வேனைப் புரளாமற் புகுந்தருளி
என்கணிலே யமுதூறித் தித்தித்தென் பிழைக்கிரங்கும்
அங்கணனே யுடையா யடியேனுன் னடைக்கலமே. எ

மாவடு வகிரன்ன கண்ணிபங் காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு வாய்நின் குறிப்பறியேன்
பாவிடை யாடு குழல்போற் கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடு வேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. அ

பிறிவறி யாவன்பர் நின்னருட் பெய்கழற் றாளிணைக்கீழ்
மறிவறி யாச்செல்வம் வந்துபெற் றாருன்னை வந்திப்பதோர்
நெறியறி யேனின்னை யேயறி யேனின்னை யேயறியும்
அறிவறி யேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. கூ

வழங்குகின் றாய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேனென் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. க0

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# ஆசைப்பத்து

---

## ஆத்தும இலக்கணம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கருடக் கொடியோன் காண மாட்டாக் கழற்சே வடியென்னும்
பொருளைத் தந்திங் கென்னை யாண்ட பொல்லா மணியேயோ
இருளைத் துரந்திட் டிங்கே வாவென் றங்கே கூவும்
அருளைப் பெறுவா னாசைப் பட்டேன் கண்டா யம்மானே. க

மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளை யென்பு தோல்போர்த்த
குப்பா யம்புக் கிருக்ககில்லேன் கூவிக்கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க்கு மப்பாலா மென்னா ரமுதேயோ
அப்பா காண ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே. உ

சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ் சிறுகுடி லிதுசிதையக்
கூவாய் கோவே கூத்தா காத்தாட் கொள்ளுங் குருமணியே
தேவா தேவர்க் கரியானே சிவனே சிறிதென் முகநோக்கி
ஆவா வென்ன ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே.

மிடைந்தெலு'ம்'பூத்தைமிக்கழுக்கூறல்வீறிலிநடைக்கூடந்[னே
தொடர்ந்தெனை நலியத்துயருறுகின்றேன்சோத்தெம்பெருமா
உடைந்துநைந்துருகி யுன்னொளிநோக்கியுன்றிரு மலர்ப்பாதம்
அடைந்துநின்றிடுவா னாசைப்பட்டேன் கண்டா யம்மானே. ௫

அளிபுண் ணகத்துப் புறந்தோல் மூடி யடியே னுடையாக்கை
புளியம் பழமொத்திருந்தே னிருந்தும் விடையாய் பொடியாடீ
எளிவந் தென்னை யாண்டு கொண்ட என்னா ரமுதேயோ
அளியே னென்ன ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே. ௬

எய்த்தே னாயே னினியிங் கிருக்க கில்லே னிவ்வாழ்க்கை
வைத்தாய் வாங்காய் வானோ ரறியா மலர்ச்சே வடியானே
முத்தா வுன்றன் முகவொளி நோக்கி முறுவல் நகைகாண
அத்தா சால ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே.

பாரோர் விண்ணோர் பரவி யேத்தும் பரனே பரஞ்சோதீ
வாராய் வாரா வுலகந் தந்து வந்தாட் கொள்வானே
பேரா யிரமும் பரவித் திரிந்தெம் பெருமா னெனவேத்த
ஆரா வமுதே யாசைப் பட்டேன் கண்டா யம்மானே. ௭

கையாற் றொழுதுன் கழற்சே வடிகள் கழுமத் தழுவிக்கொண்
டெய்யாதென்றன் றலைமேல்வைத்தெம்பெருமான்பெருமானென்

றையா வென்றன் வாயா லரற்றி யழல்சேர் மெழுகொப்ப
ஐயாற் றரசே யாசைப் பட்டேன் கண்டா யம்மானே. ௮

செடியா ராக்கைத் திறமற வீசிச் சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டென் கண்ணிணை களிகூரப்
படிதா னில்லாப் பரம்பர னேயுன் பழவடி யார்கூட்டம்
அடியேன் காண ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே.

வெஞ்சே லனைய கண்ணார்தம் வெகுளி வலையி லகப்பட்டு
நைஞ்சே னாயேன் ஞானச்சுடரே நானோர் துணைகாணேன்
பஞ்சே ரடியாள் பாகத் தொருவா பவளத் திருவாயால்
அஞ்சே லென்ன ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே. ௧௦

## திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# அதிசயப்பத்து

## முத்தி இலக்கணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

வைப்புமா டென்று மாணிக்கத்தொளியென்று மனத்திடை யுருகாதே, செப்பு நேர்முலை மடவர லியர்தங்கள் திறத்திடை நைவேனை, ஒப்பி லாதன வுவமனி லிறந்தன வொண்மலர்த் திருப்பாதத், தப்ப னாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. க

நீதி யாவன யாவையு நினைக்கிலேனினைப்பவரொடுங்கூடேன்
ஏத மேபிறந் திறந்துழல் வேனைறனை யுன்னடி யானென்று
பாதி மாதொடுங் கூடிய பரம்பர னிரந்தர மாய்நின்ற
ஆதி யாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. உ

முன்னை யென்னுடைவல்வினைபோயிடமுக்கண துடையெந்தை
தன்னை யாவரு மறிவதற் கரியவ னெளியவ னடியார்க்குப்
பொன்னைவென்றதோர்புரிசடைமுடிதனிலிளமதிய துவைத்த
அன்னை யாண்டுதன் னடியரிற் கூட்டியஅதிசயங்கண்டாமே.

பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர் காரண மிதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் றிருவருட் கூடிடு முபாயம தறியாமே

செத்துப் போயரு நரகிடை வீழ்வதற் கொருப்படு கின்றேனை
அத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே.

பரவு வாரவர்பாடு சென்றணைகிலேன்பன்மலர்பறித்தேத்தேன்
குரவு வார்குழ லார்திறத் தேநின்று குடிகெடு கின்றேனை
இரவு நின்றெரி யாடிய எம்மிறை யெரிசடை மிளிர்கின்ற
அரவ னாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. ௫

எண்ணிலேன்திருநாமவஞ்செழுத்துமென்னேழைமையதனாலே
நண்ணி லேன்கலை ஞானிகள் தம்மொடு நல்வினை நயவாதே
மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற் கொருப்படு கின்றேனை
அண்ண லாண்டுதன் னடியரிற் கூட்டியஅதிசயங் கண்டாமே.

பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய
பொய்க்கூரை, இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை, முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி, அத்த னாண்டுதன் னடியரிற் கூட்
டிய அதிசயங் கண்டாமே. ௭

நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற்
புகப்பெய்து, நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுக
மின்றி விளாக்கைத்துத், தூக்கி முன்செய்த பொய்யறத் துகள
றுத் தெழுதரு சுடர்ச்சோதி, ஆக்கி யாண்டுதன்னடியரிற்கூட்
டிய அதிசயங் கண்டாமே

உற்ற ஆக்கையி னுறுபொருள் நறுமல ரெழுதரு நாற்றம்போற்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொரு ளப்பொருள் பாராதே

பெற்றவாபெற்றபயன துநுகர்ந்திடும்பித்தர்சொற்றெளியாமே,
அத்த ணண்டு தன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே.௯

இருள் திணிந்தெழுந்திட்டதோர்வல்வினைச்சிறுகுடிலிது
வித்தைப், பொருளெ னக்களித் தருநர கத்திடை விழப்புகு
கின்றேனைத், தெருளு மும்மதில் நொடிவரை யிடிதரச் சினப்
பதத் தொடுசெந்தீ, அருளு மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய
அதிசயங் கண்டாமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# புணர்ச்சிப்பத்து.

## அத்துவித இலக்கணம்.

ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை
வாளா தொழும்புகந்து
கடைபட் டேனை யாண்டுகொண்ட
கருணா லயனைக் கருமால்பிரமன்
தடைபட் டின்னுஞ் சாரமாட்டாத்
தன்னைத் தந்தவென் னாரமுதைப்
புடைபட் டிருப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

ஆற்ற கில்லே னடியே னரசே
அவனி தலத்தைம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தைசெய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணற்போ னெக்குநெக்
குள்ளே யுருகி யோலமிட்டுப்
போற்றி நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

நீண்ட மாலு மயனும் வெருவ
நீண்ட நெருப்பை விருப்பிலேனை
ஆண்டு கொண்ட வென்னா ரமுதை
யள்ளூ றுள்ளத் தடியார்முன்
வேண்டுந் தனையும் வாய்விட்டலறி
விரையார் மலர் தூவிப்
பூண்டு கிடப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. ௩

அல்லிக் கமலத் தயனுமாலும்
அல்லா தவரு மமரர் கோனுஞ்
சொல்லிப் பரவு நாமத் தானைச்
சொல்லும் பொருளு மிறந்த சுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் னமுதை யமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

திகழத் திகழு மடியுமுடியுந்
தாண்பான் கீழ்மே லயனுமாலும்
அகழப் பறந்துங் காணமாட்டா
அம்மா னிம்மா நிலமுழுதும்
நிகழப் பணிகொண் டென்னையாட்
கொண்டவா வென்ற நீர்மையெல்லாம்
புகழப் பெறுவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. ரு

பரிந்து வந்து பரமானந்தம்
பண்டே யடியேற் கருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தி
லருமா லுற்றே னென்றென்று
சொரிந்த கண்ணீர் சொரியவுண்ணீ
ருரோமஞ் சிலிர்ப்ப வுகந்தன்பாய்ப்
புரிந்து நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

நினையப் பிறருக் கரியநெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பைத்
தனையொப் பாரை யில்லாத்தனியை
நோக்கித் தனைழத்துத் தழுத்தகண்டங்
கனையக் கண்ணீ ரருவிபாயக்
கையுங் கூப்பிக் கடிமலராற்
புனையப் பெறுவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. எ

நெக்கு நெக்குள் ளுருகி யுருகி
நின்று மிருந்துங் கிடந்துமெழுந்து
நக்கு மழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்துநவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி
திகழ நோக்கிச் சிலிர்சிலிர்த்துப்
புக்கு நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. அ

தாதாய் மூவே ழுலகுக்குந்
தாயே நாயேன் றனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன் பில்க எப்போது
மேதா மணியே யென்றென் றேத்தி
யிரவும் பகலும் எழிலார் பாதப்
போதாய்ந் தணைவ தென்று கொல்லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. கூ

காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதுங்
கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கெல்லாம்
மூப்பாய் மூவா முதலாய நின்ற
முதல்வா முன்னே யெனையாண்ட
பார்ப்பா னேயெம் பரமாவென்று
பாடிப் பாடிப் பணிந்துபாதப்
பூப்போ தணைவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. க0

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# வாழாப்பத்து

---

## முத்தி யுபாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகே னார்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

வம்பனேன் றன்னை யாண்டமா மணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரு மறியா வொருவனே யிருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவுஞ்
செம்பெரு மானே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே யென்னையாள் வானே
யென்னைநீ கூவிக்கொண் டருளே.

பாடிமால் புகழும் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஊடுவ துன்னோ டுவப்பது முன்னை
உணர்த்துவ துனக்கெனக் குறுதி
வாடினே னிங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. ௩

வல்லைவா ளரக்கர் புரமெரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எல்லைமூ வுலகு முருவியன் றிருவர்
காணுநா ளாதியீ றின்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. ௪

பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே யுடல்வாய் மூக்கொடு செவிகண்
ணென்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மே லடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. ௫

பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினே னாயே னாண்டுநீ யளித்த
அரு[illegible]ளை மருளினேன் மறந்த
வஞ்சனே[illegible] வாழ்கிலேன் கண்டாய்
வருக[illegible]ருள்புரி யாயே.

பரிதிவா ழொளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துள முருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனே னுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

பந்தணை விரலாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அந்தமி லமுதே யரும்பெரும் பொருளே
ஆரமு தேயடி யேனை
வந்துய வாண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

பாவநா சாவுன் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்
முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. கூ

பழுதில்தொல் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி யணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென றருள்புரி யாயே. க0

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# அருட் பத்து

---

## மகாமாயா சுத்தி.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே யடியே னாதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே.

நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே யுன்னை யோலமிட் டலறி
யுலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே யடியே னாதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே.

எங்கள்நா யகனே யென்னுயிர்த் தலைவா
    ஏலவார் குழலிமா ரிருவர்
தங்கள்நா யகனே தக்கநற் காமன்
    தனதுடல் தழலெழ விழித்த
செங்கண்நா யகனே திருப்பெருந் துறையில்
    செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியே னாதரித் தழைத்தால்
    அதெந்துவே யென்றரு ளாயே.

கமலநான் முகனுங் கார்முகில் நிறத்துக்
    கண்ணனு நண்ணுதற் கரிய
விமலனே யெமக்கு வெளிப்படா யென்ன
    வியன்தழல் வெளிப்பட்ட எந்தாய்
திமிலநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
    செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே யடியே னாதரித் தழைத்தால்
    அதெந்துவே யென்றரு ளாயே.

துடிகொள்நே ரிடையாள் சுரிகுழல் மடந்தை
    துணைமுலைக் கண்கள்தோய் சுவடு
பொடிகொள்வான் தழலிற் புள்ளிபோ லிரண்டு
    பொங்கொளி தங்குமார் பினனே
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற்
    செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே யடியே னாதரித் தழைத்தால்
    அதெந்துவே யென்றரு ளாயே.

தப்பனே தாயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்
தொப்பனே யுன்னை யுள்குவார் மனத்தின்
உறுசுவை யளிக்குமா ரமுதே
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே யடியே னிதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. சு

மெய்யனே விகிர்தா மேருவே வில்லா
மேவலர் புரங்கள்மூன் றெரித்த
கையனே காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்
செய்யனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே யடியே னிதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. எ

முத்தனே முதல்வா முக்கணா முனிவர்
மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே யடியே னிதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. அ

மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவங்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே யடியே னுதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே.

திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
இருந்தவா றெண்ணி யேசறா நினைந்திட்
டென்னுடை யெம்பிரா னென்றென்
றருந்தவா நினைந்தே யாதரித் தழைத்தால்
அலைகட லதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி யிதுகாண்
போதரா யென்றரு ளாயே. ௯௦

திருச்சிற்றம்பலம்

திருக்கழுக்குன்றத்தில் அருளிய

# திருக்கழுக்குன்றப் பதிகம்

## குரு தரிசனம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு மானுன் னாமங்கள் பேசுவார்க், கிணக்கி லாததோ ரின்ப மேவருந் துன்பமே துடைத் தெம்பிரான், உணக்கி லாததோர் வித்து மேல்விளை யாமலென் வினை யொத்தபின், கணக்கி லாத்திருக் கோல நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே. க

பிட்டு நேர்பட மண்சு மந்த பெருந்து றைப்பெரும் பித்தனே சட்ட நேர்பட வந்தி லாத சழக்க னேனுனைச் சார்ந்திலேன் சிட்ட னேசிவ லோக னேசிறு நாயி னுங்கடை யாயவெங் [லே. கட்டனேனையுமாட்கொள்வான்வந்துகாட்டினாய்கழுக்குன்றி

மலங்கினேன்கண்ணினீரைமாற்றிமலங்கெடுத்தபெருந்துறை விலங்கினேன்வினைக்கேடனேனினிமேல்விளைவதறிந்திலேன் இலங்கு கின்றநின் சேவ டிகளி ரண்டும் வைப்பிட மின்றியே கலங்கினேன்கலங்காமலேவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

பூணொ ணாததொ ரன்பு பூண்டு பொருந்திநாடொறும்போற்ற நாணொ ணாததொர் நாண மெய்தி நடுக்கடலுளழுந்திநான்[வும்

வேணொணாதபெ ருந்துறைப்பெருந்தோணிபற்றி யுகைத்தலுங்
காணொணாத்திருக் கோல நீவந்து காட்டினாய்கழுக்குன்றிலே.

கோல மேனிவ ராக மேகுண மாம்பெ ருந்துறைக்கொண்டலே
சீல மேதும றிந்தி லாதவென் சிந்தை வைத்த சிகாமணி
ஞால மேகரி யாக நானுனை நச்சி நச்சிட வந்திடுங்
கால மேயுனை யோத நீவந்து காட்டினாய்கழுக் குன்றிலே. ௯

பேத மில்லதொர் கற்ப ளித்த பெருந்து றைப்பெருவெள்ளமே
ஏத மேபல பேச நீயெனை யேதி லார்முன மென்செய்தாய்
சாதல் சாதல்பொல் லாமை யற்ற தனிச்ச ரண்சர ணாமெனக்
காத லாலுனை யோத நீவந்து காட்டினாய்கழுக் குன்றிலே. ௰

இயக்கி மாரறு பத்து நால்வரை யெண்குணஞ் செய்த ஈசனே
மயக்க மாயதொர் மும்ம லப்பழ வல்வி னைக்கு ளழுந்தவுந்[னைக்
துயக்க றுத்தெனை யாண்டு கொண்டுநின் தாய்மலர்க்கழல் தந்தெத
கயக்க வைத்தடி யார்மு னேவந்து காட்டினாய்கழுக் குன்றிலே.

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# கண்ட பத்து

## நிருத்த தரிசனம்.

திருச்சிற்றம்பலம்

இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே.

வினைப்பிறவி யென்கின்ற வேதனையி லகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப்பெரிது மாட்கொண்டென் பிறப்பறுத்த இணையிலியை
அனைத்துலகுந் தொழுந்தில்லை யம்பலத்தே கண்டேனே. ௨

உருத்தெரியாக் காலத்தே யுள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே.

அல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி யிருக்கும்வண்ணம்
பல்லோருங் காணவென்றன் பசுபாச மறுத்தானை
எல்லோரு மிறைஞ்சுதில்லை யம்பலத்தே கண்டேனே.

சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே. ௬

பிறவிதனை யறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டும்
உறவினொடு மொழியச்சென் றுலகுடைய வொருமுதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலமன்னி
மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே.

பத்திமையும் பரிசுமிலாப் பசுபாச மறுத்தருளிப்
பித்தனிவ னெனவென்னை யாக்குவித்துப் போாமே
சித்தமெனுந் திண்கயிற்றாற் றிருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. ௭

அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்
களவிலா ஆனந்த மளித்தென்னை யாண்டானைக்
களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே. ௮

பாங்கினொடு பரிசொன்று மறியாத நாயேனை
ஓங்கியுளத் தொளிவளர வலப்பிலா அன்பருளி
வாங்கிவினை மலமறுத்து வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை யம்பலத்தே கண்டேனே. ௯

பூதங்க ளாந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே. ௰

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# பிரார்த்தனைப் பத்து.

---

## சதாமுத்தி.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கலந்து நின்னடியா ரோடன்று வாளா களித்தி ருந்தேன்
புலர்ந்து போன காலங்கள் புகுந்து நின்ற திடர்பின்னாள் [பான்
உலர்ந்து போனே னுடையானே யுலவா வின்பச் சுடர்காண்
அலந்து போனே னருள்செய்யா யார்வங் கூர அடியேற்கே.

அடியார் சிலருன் னருள்பெற்றா ரார்வங்கூ ரயானவமே [றேன்
முடையார் பிணத்தின் முடிவின்றி முனிவா லடியேன் மூக்கின்
கடியே னுடைய கடுவினையைக் களைந்துன் கருணைக் கடல்பொங்க
உடையா யடியே னுள்ளத்தே யோவா துருக அருளாயே.

அருளா ரமுதப் பெருங்கடல்வா யடியா ரெல்லாம் புக்கழுந்த
இருளா ராக்கையி துபொறுத்தேயெய்த்தேன்கண்டாயெம்மானே
மருளார்மனத்தோருன்மத்தன்வருமாலென்றிங்கெனைக்கண்டார்
வெருளாவண்ணமெய்யன்பையுடையாய்பெறநான்வேண்டுமே.

வேண்டும் வேண்டு மெய்யடியா ருள்ளே விரும்பி யெனை
யருளால்,ஆண்டா யடியே னிடர்களைந்த அமுதே யருமா மணி

மூத்தே, தூண்டா விளக்கின் சுடரனையாய் தொண்டனேற்கு
முண்டாங்கொல், வேண்டா தொன்றும் வேண்டாது மிக்க
வன்பே மேவுதலே.

மேவு முன்ற னடியாருள் விரும்பி யானு மெய்ம்மையே
காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா வுன்றன் கருணையினாற்
பாவி யேற்கு முண்டாமோ பரமா னந்தப் பழங்கடல் சேர்ந்
தாவி யாக்கை யானெனதென் றியாதுமின்றி யறுதலே. ௫

அறவே பெற்றார் நின்னன்ப ரந்தமின்றி யகநெகவும்
புறமே கிடந்து புலைநாயேன் புலம்புகின்றே னுடையானே
பெறவே வேண்டு மெய்யன்பு பேரா வொழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடலே.

கடலே யனைய ஆனந்தங் கண்டா ரெல்லாங் கவர்ந்
துண்ண, இடரே பெருக்கி யேசற்றிங் கிருத்த லழகோ அடிநா
யேன், உடையாய் நீயே யருளுதியென் றுணர்த்தாதொழிந்தே
கழிந்தொழிந்தேன, சுடரா ரருளா லிருணீங்கச் சோதீ யினித்
தான் துணியாயே. ௭

துணியா வுருகா அருள்பெருகத் தோன்றுந் தொண்ட
ரிடைப்புகுந்து, திணியார் மூங்கிற்சிந்தையேன் சிவனேநின்று
தேய்கின்றேன், அணியா ரடியா ருனக்குள்ள அன்புந் தாரா
யருளளியத், தணியா தொல்லை வந்தருளித் தளிர்ப்பொற்
பாதந் தாராயே. ௮

தாரா அருளொன் றின்றியே தந்தா யென்றுன் தமரெல்லாம்
ஆரா நின்றா ரடியேனு மயலார் போல அயர்வேனோ

சீரா ரருளாற் சிந்தனையைத் திருத்தி யாண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே.

மானேர் பங்கா வந்திப்பார் மதுரக் கனியே மனநெகா
நானேர் தோளாச் சுரையொத்தா னம்பிஇத்தால் வாழ்ந்தாயே
ஊனே புகுந்த வுனை யுணர்ந்தே யுருகிப்பெருகும்உள்ளத்தைக்
கோனே யருளுங் காலந்தான் கொடியேற் கென்றோ கூடுவதே.

கூடிக் கூடி யுன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடி வாடி வழியற்றேன் வற்றன் மரம்போல் நிற்பேனோ
ஊடி யூடி யுடையாயொடு கலந்துள் ளுருகிப் பெருகிநெக்
காடி யாடி யானந்த மதுவே யாக அருள்கலந்தே. ௧௧

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# குழைத்த பத்து

---

## ஆத்தும நிவேதனம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய் காவா யுடையாய் கொடுவினையேன், உழைத்தா லுறுதி யுண்டோதா னுமையாள் கணவா எனையாள்வாய், பிழைத்தாற் பொறுக்கவேண்டாவோ பிறைசேர் சடையாய் முறையோவென், றழைத்தா லருளா தொழிவதே யம்மா னேயுன் னடியேற்கே. ௧

அடியே னல்ல லெல்லாமுன் னகல வாண்டாயென் றிருந்தேன்
கொடியே ரிடையாள் கூறாவெங் கோவேயாவாவென் றருளிச்
செடிசே ருடலைச் சிதையாத தெத்துக்கெங்கள்சிவலோகா[மே.
உடையாய் கூவிப் பணிகொள்ளாதொறுத்தாலொன்றும்போது

ஒன்றும் போதா நாயேனை யுய்யக் கொண்ட நின்கருணை
இன்றே யின்றிப் போய்த்தோதா னேழை பங்கா எங்கோவே
குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீகொண்டால்
என்றான் கெட்ட திரங்கிடா யெண்டோள்முக்கணெம்மானே.

மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகவென் றனைநூக்கி யுழலப் பண்ணு வித்திட்டாய்

ஆறேடியே னறியாமை யறிந்து நீயே யருள்செய்து
கோனே கூவிக் கொள்ளுநா ளென்றென் றுன்னைக்கூறுவதே.

கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ
வேறோர்பரிசிங்கொன்றில்லைமெய்ம்மையுன்னைவிரித்துரைக்கில்
தேறும்வகையென்சிவலோகாதிகைத்தால்தேற்றவேண்டாவோ.

வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தரு வோய்நீ, வேண்டு மயன்மாற் கரியோய்நீ வேண்டி யென்னைப் பணிகொண்டாய், வேண்டி நீயா தருள்செய்தா யானு மதுவே வேண்டினல்லால், வேண்டும் பரிசொன் றுண்டென்னி லதுவு முன் றன் விருப்பன்றே.

அன்றே யென்ற னாவியு முடலுமுடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண் டிலையோ, இன்றோ ரிடையூ றெனக்குண்டோ எண்டோண் முக்க ணெம்மானே, நன்றேசெய்வாய் பிழைசெய்வாய்நானோ இதற்கு நாயகமே. ௭

நாயிற் கடையா நாயேனை நயந்து நீயே யாட்கொண்டாய்
மாயப் பிறவி யுன்வசமே வைத்திட் டிருக்கு மதுவன்றி
ஆயக் கடவே னானோதா னென்ன தோவிங் கதிகாரங்
காயத் திடுவா யுன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே.

கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா திரவும் பகலுநா னவையே யெண்ணு மதுவல்லால்

மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ அடிமை சால அழகுடைத்தே.

அழகே புரிந்திட் டடிநாயே னரற்று கின்றே னுடையானே
திகழா நின்ற திருமேனி காட்டி யென்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதமெனக்குப் புராண நீதந் தருளாதே
குழகா கோலமறையோனே கோனேயென்னைக் குழைத்தாயே.

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# உயிருண்ணிப் பத்து.

## சிவானந்த மேலிடுதல்.

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பைந்நாப்பட அரவேரல்கு லுமைபாகம தாயென்
மெய்ந்நாள்தொறும் பிரியாவினைக் கேடாவிடைப் பாகா
செந்நாவலர் பாசும்புகழ்த் திருப்பெருந்துறை யுறைவாய்
எந்நாட்களித் தெந்நாளிறு மாக்கே னினியானே.

நாயடி யணைவாளொரு காய்க்குத்தவி சிட்டிங்
கூனொருடல் புகுந்தானுயிர் கலந்தானுளம் பிரியான்

தென்ருர்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறையுறைவான்
வானோர்களு மறியாததோர் வளமீந்தன னெனக்கே. உ

எனைநானென்ப தறியேன்பக லிரவாவது மறியேன்
மனவாசகங் கடந்தானெனை மத்தோன்மத்த னாக்கிச்
சினமால்விடையுடையான்மன்னுதிருப்பெருந்துறையுறையும்
பனவனெனைச் செய்தபடி றறியேன்பராஞ் சுடரே. ௩

வினைக்கேடரு முளரோபிறர் சொல்லீர்விய னுலகில்
எனைத்தான்புகுந் தாண்டானென தென்பின்புரை யுருக்கிப்
பினைத்தான்புகுந் தெல்லேபெருந் துறையிலுறை பெம்மான்
மனத்தான்கண்ணி னகத்தான்மறு மாற்றத்திடை யானே.

பற்ருங்கவை யற்றீர்பற்றும் பற்ருங்கது பற்றி
நற்ருங்கதி யடைவோமெனிற் கெடுவீரோடி வம்மின்
தெற்ருர்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை யிறைசீர்
கற்ருங்கவன் கழல்பேணின ரொடுங்கூடுமின் கலந்தே. ௫

கடலின்திரை யதுபோல்வரு கலக்கமல மறுத்தென்
உடலும்மென துயிரும்புகுந் தொழியாவண்ண நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய திருப்பெருந்துறை யுறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள் பரன்தான்செய்த படிறே.

வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம் வேண்டேன் மண்ணும் விண்ணும், வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம் வேண் டார் தமை நாளுந், தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு திருப்பெருந்துறை யிறைதாள், பூண்டேன்புறம் போகே னினிப் புறம் போகலொட் டேனே. எ

கோற்றேனெனக் கென்கோகுரை கடல்வாயமு தென்கோ
ஆற்றேனெங்க ளரனேயரு மருந்தேயென தரசே
சேற்றார்வயல் புடைசூழ்தரு திருப்பெருந்துறை யுறையும்
நீற்றார்தரு திருமேனிநின் மலனேயுனை யானே. ௮

எச்சம்மறி வேனானெனக் கிருக்கின்றதை யறியேன்
அச்சோஎங்க ளரனேயரு மருந்தேயென தமுதே
செச்சைமலர் புரைமேனியன் திருப்பெருந்துறை யுறைவான்
நிச்சம்மென நெஞ்சின்மன்னி யானாகிநின் றானே. ௯

வான்பாவிய வுலகத்தவர் தவமேசெய அவமே
ஊன்பாவிய வுடலைச்சுமந் தடவிமர மானேன் [வாய்
தேன்பாய்மலர்க் கொன்றைமன்னு திருப்பெருந்துறை யுறை
நான்பாவிய னானாலுனை நல்காயென லாமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

தில்லையில் அருளிய

# அச்சப்பத்து

## ஆனந்த முறுதல்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வா ளரவு மஞ்சேன் பொய்யர்தம் மெய்யு மஞ்சேன்
கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாத நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. க

வெருவரேன்வேட்கைவந்தால்வினைக்கடல்கொளினுமஞ்சேன்
இருவரான் மாறு காணா எம்பிரான் தம்பி ரானாந்
திருவுரு வன்றி மற்றோர் தேவரெத் தேவரென்ன
அருவரா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. உ

வன்புலால் வேலு மஞ்சேன் வளைக்கையார்கடைக்கணஞ்சேன்
என்பெலா முருக நோக்கி யம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை யேத்தி யினிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. ங

கிளியனார் கிளவி யஞ்சே னவர்கிறி முறுவ லஞ்சேன்
வெளியநீ றாடு மேனி வேதியன் பாத நண்ணித்

துளியுலாங் கண்ண ராகித் தொழுதழு துள்ள நெக்கிங்
களியிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே,

பிணியெலாம் வரினு மஞ்சேன் பிறப்பினோ டிறப்பு மஞ்சேன்
துணிநிலா அணியி னான்றன் தொழும்பரோ டழுந்தி யம்மால்
திணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீ
றணிகிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. ௫

வாளுலா மெரியு மஞ்சேன் வரைபுரண் டிடினு மஞ்சேன்
தோளுலா நீற்ற னேற்றன் சொற்பதங் கடந்த அப்பன்
தாளதா மரைக ளேத்தித் தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே.

தகைவிலாப் பழியு மஞ்சேன் சாதலை முன்ன மஞ்சேன்
புகைமுகந் தெரிகை வீசிப் பொலிந்தவம் பலத்து ளாடும்
முகைநகைக் கொன்றை மாலை முன்னவன் பாத மேத்தி
அகநெகா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. ௭

தறிசெறி களிறு மஞ்சேன் தழல்விழி யுழுவை யஞ்சேன்
வெறிகமழ் சடைய னப்பன் விண்ணவர் நண்ணமாட்டாச்
செறிதரு கழல்க ளேத்திச் சிறந்தினி திருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. ௮

மஞ்சுலா முருமு மஞ்சேன் மன்னரோ டுறவு மஞ்சேன்
நஞ்சமே யமுத மாக்கு நம்பிரா னெம்பி ரானைச்
செஞ்சவே யாண்டு கொண்டான் திருமுண்டந் தீட்டமாட்டா
தஞ்சுவா ரவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. ௯

கோணிலா வாளி யஞ்சேன் கூற்றுவன் சீற்ற மஞ்சேன்
நீணிலா அணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

திருப்பெருந்துறையில் அருளிய

# திருப்பாண்டிப் பதிகம்.

---

## சிவானந்த விளைவு.

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்
ஒருவரை யொன்று மிலாத வரைக்கழற் போதிறைஞ்சித்
தெரிவர நின்றுருக் கிப்பரி மேற்கொண்ட சேவகனார்
ஒருவரை யன்றி யுருவறி யாதென்ற னுள்ளமதே.

தரைமறந் தறிமால்கொள்வர் சார்ந்தவர் சாற்றிச்சொன்னோங்
கதிரை மறைத்தன்ன சோதி கழுக்கடை கைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்து கூடிடு மேற்குடி கேடுகண்டீர்
மதுரையர் மன்னன் மறுபிறப் போட மறித்திடுமே.

நீரின்ப வெள்ளத்துள் நீந்திக் குளிக்கின்றநெஞ்சங்கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்பவெள்ளத் துருக்கொண்டு தொண்டரையுள்ளங்கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ லேசென்று பேணுமினே.

செறியும் பிறவிக்கு நல்லவர்செல்லன்மின் தென்னனன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக் காலமெக் காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வா ளுறைகழித் தானந்த மாக்கடவி
எறியும் பிறப்பை யெதிர்ந்தார் புரள இருநிலத்தே.

காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே. ௩

ஈண்டிய மாயா இருள்கெட எப்பொரு ளும்விளங்கத்,
தூண்டிய சோதியை மீனவ னுஞ்சொல்ல வல்லனல்லன்
வேண்டிய போதே விலக்கிலை வாய்தல் விரும்புமின்றாள்
பாண்டிய னாருள் செய்கின்ற முத்திப் பரிசிதுவே. க

மாயவ னப்பரி மேல்கொண்டு மற்றவர் கைக்கொளலும்
போயறு மிப்பிறப் பென்னும் பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத் தன்னரு ளேயருளுஞ்
சேய நெடுங்கொடைத் தென்னவன் சேவடி சேர்மின்களே.

அழிவின்றி நின்றதொ ரானந்த வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக் கடிய வினையகற்றிப்

பழமலம் பற்றறுத் தாண்டவன் பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை யேசென்று முந்துமினே. ௮

விரவிய தீவினை மேலைப் பிறப்புமுந் நீர்கடக்கப்
பரவிய அன்பரை யென்புருக் கும்பரம் பாண்டியனார்
புரவியின் மேல்வரப் புந்திகொ ளப்பட்ட பூங்கொடியார்
மரவியன் மேல்கொண்டு தம்மையுந் தாமறி யார்மறந்தே. ௯

கூற்றைவென் றாங்கைவர் கோக்களை யும்வென் றிருந்தழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியுந் தானுமோர் மீனவன்பால்
ஏற்றுவந் தாருயி ருண்ட திறலொற்றைச் சேவகனே
தேற்றமி லாதவர் சேவடி சிக்கெனச் சேர்மினகளே. ௧௰

திருச்சிற்றம்பலம்

திருத்தோணிபுரத்தில் அருளிய

# பிடித்தபத்து

## முத்திக் கலப்புரைத்தல்

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக்கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடையமெய்ப் பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணங் காத்தெனை யாண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௩

அருளுடைச் சுடரே யளிந்ததோர் கனியே
பெருந்திற லருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௪

ஒப்புனக் கில்லா வொருவனே யடியேன்
உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே
மெய்ப்பத மறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோ ரன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௫

அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்த மருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியஎம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே யடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௬

பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௭

அத்தனே யண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே யாதும் ஈறில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே யெல்லா வுயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை யல்லையாய் நிற்கும்
எத்தனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௮

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௯

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி யெளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடக்கெலா மறுத்தநற் சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

திருப்பெருந்துறையில் அருளிய

# திருவேசறவு

## சுட்டறிவொழித்தல்.

கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தெ னென்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே.

பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் னாளானார்க்
குண்ணார்ந்த வாரமுதே யுடையானே யடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாவென்னக்
கண்ணார வுய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே. உ

ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னு மருநரகில்
ஆர்தமரு மின்றியே யழுந்துவேற் காவாவென்
றோதமலி நஞ்சுண்ட வுடையானே யடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேயெம் பரம்பரனே.

பச்சைத்தா ளரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே யடியேனை யுய்யக்கொண்டு

எச்சத்தார சிறுதெய்வ மேத்தாதே யச்சோவென்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேயுன் றிறனினைந்தே.

கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகே னாயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேனெம் பெருமானே யடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. ௫

பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணா லிடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவே னின்னருளால்
உய்ஞ்சேனெம் பெருமானே யுடையானே யடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேயம் பலத்தமுதே. ௬

என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கு மறியவொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பானீ யகநெகவே புகுந்தருளி யாட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேயெம் பெருமானே. ௭

மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஒத்தானே பொருளானே யுண்மையுமா யின்மையுமாய்ப்
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினாற்
பேர்த்தேநீ யாண்டவா றன்றேயெம் பெருமானே. ௮

மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமா னென்றேத்திப்
யருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே யிடங்கொண்ட அம்மானே. ௯

யானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

திருவாரூரில் அருளிய

# திருப்புலம்பல்

## சிவானந்த முதிர்வு.

கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

பூங்கமலத் தயனொடுமா லறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் ணீறாடி
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே அடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே.

சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையா யடியேனான்
உடையானே யுனையல்லா துறுதுணைமற் றறியேனே. ௨

உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. ௩

திருச்சிற்றம்பலம்.

தில்லையில் அருளிய

# குலாப்பத்து

## அநுபவம் இடையீடுபடாமை.

கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

ஓடுங் கவந்தியுமே யுறவென்றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே யெனத்தெளிந்து
கூடு முயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே.

துடியே ரிடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவே னெனைத்தன தாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே

என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே.

குறியு நெறியுங் குணமுமிலார் குழாங்கள் தமைப்
பிறியு மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்

செறியுங் கருத்தி லுருத்தமுதாஞ் சிவபதத்தை
அறியுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௪

பேருங் குணமும் பிணிப்புறுமிப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாஞ்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௫

கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடல மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ணம் நானணுகும்
அம்பொன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௬

மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெரிய
மிதிக்குந் திருவடி யென்றலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாச மொன்றுமிலோ மெனக்களித்திங்
கதிர்க்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௭

இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே
நடக்குந் திருவடி யென்றலைமே னட்டமையாற்
கடக்குந் திறலைவர் கண்டகர்தம் வல்லாட்டை
அடக்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௮

பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்
கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்
தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்றலையால்
ஆட்செய் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௯

கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்
கிம்மை தரும்பய னித்தனையு மீங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# அற்புதப்பத்து

## அநுபவமாற்றாமை.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

**மை**ய லாயிந்த மண்ணிடை வாழ்வெனு மாழியு ளகப்பட்டுத்
தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான் தலைதடு மாறாமே
பொய்யெலாம்விடத்திருவருள்தந்துதன்பொன்னடியிணைகாட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோரற்புதம்விளம்பேனே.

எய்த்த மாமல ரிட்டுமுட் டாததோ ரியல்பொடும் வணங்காதே
சாத்த மார்முலைத் தையனல் லாரொடுந் தலைதடு மாறாகிப்
போந்தியான்றுயர்புகாவணமருள்செய்துபொற்கழலிணைகாட்டி
வேந்தனாய்வெளியேயென்முனின்றதோரற்புதம்விளம்பேனே.

நடித்துமண்ணிடைப்பொய்யினைப்பலசெய்துநானெனதெனுமா
கடித்தவாயிலேநின்றுமுன்வினைமிகக்கழறியேதிரிவேனைப் [யக்
பிடித்துமுன்னின்றப்பெருமறைதேடிய அரும்பொருளடியேனை
அடித்தடித்துவக்காரமுன்தீற்றியஅற்புதமறியேனே. ௩

பொருந்து மிப்பிறப் பிறப்பிவை நினையாது பொய்களே புகன்றுபோய்க், கருங்கு ழலினார் கண்களா லேறுண்டு கலங் கியே கிடப்பேனைத், திருந்து சேவடிச் சிலம்பவைசிலம்பிடத் திருவொடு மகலாதே, அருந்துணைவனாயாண்டுகொண்டருளிய அற்புத மறியேனே.

மாடுஞ் சுற்றமு மற்றுள போகமு மங்கையர் தம்மோடுங் கூடி யங்குள குணங்களா லேறுண்டு குலாவியே திரிவேனை வீடுதந்தென்றன்வெந்தொழில்வீட்டிடமென்மலர்க்கழல்காட்டி ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோ ரற்புத மறியேனே. ௫

வணங்கு மிப்பிறப்பிறப்பிவை நினையாது மங்கையர் தம் மோடும், பிணைந்துவாயிதழ்ப்பெருவெள்ளத்தழுந்திநான்பித்த னாய்த் திரிவேனைக், குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல் கோமளத் தொடுங்கூடி, அணைந்து வந்தெனை யாண்டுகொண் டருளிய அற்புத மறியேனே.

இப்பி றப்பெனி லிணைமலர் கொய்துநா னியல்பொடஞ் செழுத்தோதித், தப்பி லாதுபொற் கழல்களுக்கிடாதுநான் றடமுலை யார்தங்கள், மைப்பு லாங்கண்ணா லேறுண்டு கிடப்பேனை மலரடி யிணைகாட்டி, அப்ப னென்னைவந் தாண்டுகொண் டருளிய அற்புத மறியேனே.

ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின இருவினை யறுத்தென்னை
ஒசையாலுணர்வார்க்குணர்வரியவனுணர்வுதந்தொளியாக்கிப்
பாசமானவைபற்றறுத்துயர்ந்ததன்பரம்பெருங்கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய அற்புத மறியேனே. அ

பொச்சை யானவிப் பிறவியிற் கிடந்துநான் புழுத்தலை
நாய்போல, இச்சை யாயின ஏழையர்க் கேசெய்தங் கிணங்
கியே திரிவேனை, இச்ச கத்தரி யயனுமெட் டாததன் விரை
மலர்க் கழல்காட்டி, அச்ச னென்னையும்ஆண்டுகொண்டருளிய
அற்புத மறியேனே. கூ

செறியு மிப்பிறப் பிறப்பிவை நினையாது செறிகுழ லார்
செய்யுங் கிறியுங் கீழ்மையுங் கெண்டையங் கண்களு முன்
னியே கிடப்பேனை, இறைவன் எம்பிரான் எல்லையில்லாததன்
இணைமலர்க் கழல்காட்டி, அறிவு தந்தெனை யாண்டுகொண்
டருளிய அற்புத மறியேனே. கo

திருச்சிற்றம்பலம்.

திருப்பெருந்துறையில் அருளிய

# சென்னிப் பத்து.

## சிவவிளைவு

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

தேவ தேவன்மெய்ச் சேவகன் தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலு மறியொ ணாமுத லாய வானந்த மூர்த்தியான்
யாவ ராயினு மன்ப ரன்றி யறியொ ணாமலர்ச் சோதியான்
தூயமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிச்சுடருமே. க

அட்ட மூர்த்தி யழக னின்னமு தாய வானந்த வெள்ளத்தான்
சிட்டன்மெய்ச்சிவலோகநாயகன்தென்பெருந்துறைச்சேவகன்
மட்டுவார்குழன்மங்கையாளையோர்பாகம்வைத்தஅழகன்றன்
வட்டமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிமலருமே. உ

நங்கைமீரெனை நோக்குமின் னங்கணாத னம்பணி கொண்டவன்; தெங்குசோலைகள் சூழ்பெருந்துறை மேயசேவக நாயகன், மங்கை மார்கையில் வளையுங் கொண்டெம் முயிருங் கொண்டெம் பணிகொள்வான், பொங்கு மாமலர்ச் சேவ டிக் கணஞ் சென்னி மன்னிப் பொலியுமே. ௩

பத்தர் சூழப் பராபரன் பாரில் வந்துபார்ப் பானெனச்
சித்தர் சூழச்சிவபிரான் தில்லைமூதூர் நடஞ்செய்வான் [வான்
எத்தனாகிவந்தில்புகுந்தெமையாளுங்கொண்டெம்பணிகொள்
வைத்த மாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னி மன்னி மலருமே.

மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி மதித்தி
டாவகை நல்கினான், வேயதோளுமை பங்கனெங்கள் திருப்பெ
ருந்துறை மேவினான், காயத் துள்ளமு தூற வூறநீ கண்டு
கொள்ளென்று காட்டிய, சேய மாமலர்ச் சேவ டிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. ௫

சித்தமேபுகுந்தெம்மையாட்கொண்டுதீவினைகெடுத்துய்யலாம்
பத்திதந்துதன்பொற்கழற்கணேபன்மலர்கொய்துசேர்த்தலும்
முத்தி தந்திந்த மூவுல குக்கு மப்பு றத்தெமை வைத்திடும்
அத்தன்மாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிமலருமே.

பிறவியென்னுமிக்கடலைநீந்தத்தன்பேரருள்தந்தருளினான்
அறவையென்றடியார்கள்தங்களருட்குழாம்புகவிட்டுநல் [மாந்
உறவுசெய்தெனையுய்யக்கொண்டபிரான்றனுண்மைப்பெருக்க
திறமை காட்டிய சேவடிக்கணஞ் சென்னி மன்னித்திகழுமே.

புழுவி னாற்பொதிந் திடுகுரம்பையிற் பொய்தனையொழி
த்திடும், எழில்கொள் சோதியெம் மீசனெம்பிரா னென்னு
டையப்ப னென்றென்று, தொழுதகையினராகித் தூய்மலர்க்
கண்கள் நீர்மல்குந் தொண்டர்க்கு, வழுவிலாமலர்ச் சேவடிக்க
ணஞ் சென்னி மன்னி மலருமே.

வம்பனாய்த்திரிவேனைவாவென்றுவல்வினைப்பகைமாய்த்தும்ம
உம்ப ரானுல கூட றுத்தப் புறத்த னாய்நின்ற எம்பிரான்
அன்பரானவர்க்கருளிமெய்யடியார்கட்கின்பந்தழைத்திடுஞ்
செம்பொன்மாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.

முத்தனைமுதற்சோதியைமுக்கணப்பனைமுதல்வித்தினைச்
சித்த னைச்சிவ லோக னைத்திரு நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காளிங்கே வம்மி னீருங்கள் பாசந் தீரப் பணிமினோ
சித்தமார்தருஞ்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# திருவார்த்தை.

---

## அ றி வி த் த ன் பு று த ல்

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கரு ணையடியார்
குலாவு நீதிகுண மாகநல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்
தாதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறி வாரெம்பி ரானாவாரே.

மாலயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்க்கருள் செய்தவீசன்
ஞால மதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலந்திகழுங்
கோல மணியணி மாடநீடு
குலாவு மிடவை மடநல்லாட்குச்
சீல மிகக்கரு ணையளிக்குந்
திறமறி வாரெம்பி ரானாவாரே.

அணிமுடி யாதி யமரர்கோமான்
ஆனந்தக் கூத்த னறுசமயம்
பணிவகை செய்து படவதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறையெம்
பேரரு ளாளன்பெண் பாலுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறி வாரெம்பி ரானாவாரே.

வேடுரு வாகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட விருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆட லமர்ந்த பரிமாவேறி
ஐயன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர் களையெங்கு மாண்டுகொண்ட
இயல்பறி வாரெம்பி ரானாவாரே.

வந்திமை யோர்கள் வணங்கியேத்த
மாக்கரு ணைக்கட லாயடியார்
பந்தணை விண்டற நல்குமெங்கள்
பரமன் பெருந்துறை யாதியந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்தன்
றோங்கு மதிலிலங் கையதனிற்
பந்தணை மெல்விர லாட்கருளும்
பரிசறி வாரெம்பி ரானாவாரே.

வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
வேடுவ னாய்க்கடி நாய்கள்சூழ
ஏவற்செ யல்செய்யுந் தேவர்முன்னே
யெம்பெரு மான்றா னியங்குகாட்டில்
ஏவுண்ட பன்றிக் கிரங்கியீசன்
எந்தை பெருந்துறை யாதியன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வாரெம்பி ரானாவாரே.

நாத முடையதோர் நற்கமலப்
போதினி னண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த
ஒளிவளர் சோதியெம் மீசன்மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை
அறியவல் லாரெம்பி ரானாவாரே.

பூவலர் கொன்றைய மாலைமார்பன்
போருகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாளுமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புக ழெங்களீசன்
இருங்கடல் வாணற்குத் தீயிற்றோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறி வாரெம்பி ரானவாரே. அ

தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதிம கேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்தவீசன்
தென்னன் பெருந்துறை யாளியன்று
காதல் பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதங் கெடுத்தென்னை யாண்டருளுங்
கிடப்பறி வாரெம்பி ரானவாரே. கூ

அங்கண னெங்க ளமரர்பெம்மான்
அடியார்க் கமுத னவனிவந்த
எங்கள் பிரானிரும் பாசந்தீர
இகபர மாயதோ ரின்பமெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடுஞ்
சதுரன் பெருந்துறை யாளியன்று
மங்கையர் மல்கு மதுரைசேர்ந்த
வகையறி வாரெம்பி ரானவாரே. ௧0

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# எண்ணப்பதிகம்

## ஒழியா இன்பத்துவகை.

ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

**பா**ருரு வாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டுஞ்
சீருரு வாய சிவபெரு மானே
செங்கம லமலர் போல
ஆருரு வாயவென் னாரமு தேயுன்
அடியவர் தொகை நடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி
யென்னையு முய்யக்கொண் டருளே.

உரியே னல்லே னுனக்கடிமை
யுன்னைப் பிரிந்திங் கொருபொழுதுந்
தரியே னாயே னின்னதென்று
அறியேன் சங்கரா கருணையினாற்
பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன்
பெய்கழ லடிகாட்டிப்
பிரியே னென்றென் றருளிய அருளும்
பொய்யோ எங்கள் பெருமானே.

என்பே யுருகநின் னருள ளித்துன்
இணைமல ரடிகாட்டி
முன்பே என்னை யாண்டு கொண்ட
முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே யருளி யெனையுருக்கி
உயிருண் கின்ற எம்மானே
நண்பே யருளா யென்னுயிர்
நாதா நின்னருள் நாணுமே.

பத்தில னேனும் பணிந்தில னேனுமுன்
னுயர்ந்தபைங் கழல்காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
பிறப்பறுப் பாயெம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
முதல்வனே முறையோவென்
றெத்தனை யானும் யான்றொடர்ந் துன்னை
யினிப்பிரிந் தாற்றேனே.

காணும தொழிந்தே னின்றிருப்பாதங்
கண்டுகண் களிகூரப்
பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன்
பின்னையெம் பெருமானே
தாணுவே யழிந்தேன் நின்னினைந் துருகுந்
தன்மையென் புன்மைகளாற்
காணும தொழிந்தேன் நீயினி வரினுங்
காணவு நாணுவனே.

பாற்றிரு நீற்றெம் பரமனைப்
 பரங்கரு ணையோடு மெதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ்
 சோதியை நீதியிலேன்
போற்றியென் னமுதே யெனநினைந் தேத்திப்
 புகழ்ந்தழைத் தலறியென் னுள்ளே
ஆற்றுவ னாக வுடையவ னேயெனை
 யாவவென் றருளாயே. ௬

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# யாத்திரைப் பத்து

## அநுபவாதீதமுரைத்தல்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பூவார் சென்னி மன்னனெம் புயங்கப் பெருமான் சிறி யோமை, ஓவா துள்ளங் கலந்துணர்வா யுருக்கும் வெள்ளக் கரு ணையினால், ஆவா வென்னப் பட்டன்பா யாட்பட்டீர்வந் தொ ருப் படுமின், போவோங் காலம் வந்ததுகாண்பொய்விட் டுடை யான் கழல்புகவே. க

புகவேவேண்டாபுலன்களில்நீர்புயங்கப்பெருமான்பூங்கழல்கள்
மிகவேநினைமின்மிக்கவெல்லாம்வேண்டாபோகவிடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து நாயே யனைய நமையாண்ட
தகவே யுடையான் றனைச்சாரத் தளராதிருப்பார் தாந்தாமே..

தாமே தமக்குச் சுற்றமுந் தாமே தமக்கு விதிவகையும்
யாமாரெமதார்பாசமாரென்னமாயமிவைபோகக் [கொண்டு
கோமான்பண்டைத்தொண்டரொடுமவன்றன்குறிப்பேகுறிக்
போமாறமைமின்பொய்நீக்கிப்புயங்கனாள்வான்பொன்னடிக்கே.

அடியாரானீரெல்லீருமகலவிடுமின்விளையாட்டைக் [பைச்
கடிசேரடியேவந்தடைந்துகடைக்கொண்டிருமின்திருக்குறிப்
செடிசேருடலைச்செலநீக்கிச்சிவலோகத்தேநமைவைப்பான்
பொடிசேர்மேனிப்புயங்கனறன்பூவார்கழற்கேபுகவிடுமே.

விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர் கால மினி யில்லை, உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடனபோவதற் கே யொருப்படுமின், அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள் அணியார் கதவ தடையாமே, புடைபட் டுருகிப்போற்றுவோம் புயங்க னாள்வான் புகழ்களையே. ௫

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்புயங்கன் தாளேபுந்தி வைத்திட், டிகழ்மி னெல்லா அல்லலையு மினியோ ரிடையூ றடையாமே, திகழுஞ் சீரார் சிவபுரத்துச் சென்று சிவன்றாள் வணங்கிநாம், நிகழு மடியார் முனசென்று நெஞ்ச முருகி நிற் போமே.

நிற்பார் நிற்கநில் லாவுலகி னில்லோ மினிநாஞ் செல்வோமே
பொற்பாலொப்பாந்திருமேனிப்புயங்கனாள்வான்பொன்னடிக்கே

நிற்பீ ரெல்லாந் தாழாதே நிற்கும் பரிசே யொருப்படுமின்
பிற்பா னின்று பேழ்கணித்தாற் பெறுதற்கரியன்பெருமானே.

பெருமான் பேரா னந்தத்துப் பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னைநீ ரம்மா வழுங்கி யரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவந் திறந்த போதே சிவபுரத்துத்
திருமாலறியாத்திருப்புயங்கன் திருத்தாள்சென்றுசேர்வோமே.

சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற்பொலியும் வேற்கண்ணாள் பங்கன் புயங்கனருளமுதம்
ஆரப் பருகி யாராத ஆர்வங் கூர அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன்கழற்கே பொய்யிற் கிடந்து புரளாதே.

புரள்வார் தொழுவார் புகழ்வாரா யின்றே வந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள்வீ ராகிலிதுசெய்மின் சிவலோகக்கோன்திருப்புயங்கன்
அருளார் பெறுவா ரகலிடத்தே அந்தோஅந்தோ அந்தோவே.

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# திருப்படையெழுச்சி

## பிரபஞ்சப் போர்.

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

ஞானவா ளேந்துமையர் நாதப் பறையறைமின்
மானமா ஏறுமையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவச மடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோநா மாயப்படை வாராமே.

தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை சென்மின்கள்
அண்டர்நா டாள்வோநா மல்லற்படை வாராமே.

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# திருவெண்பா

---

## அணைந்தோர் தன்மை.

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன் - செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து.

ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே யென்செய்கேன் - தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்று மத்தன் பெருந்துறையான்
தானென்பா ராரொருவர் தாழ்ந்து. ௨

செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையி னுயிர்ப்பறியேன் - வையத்
திருந்துறையுள் வேன்மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்
பெருந்துறையின் மேய பிரான்.

முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் - தென்னன்

பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரந் தீர்க்கு மருந்து.

அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற
மறையோனு மாலுமால் கொள்ளும் - இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையு மென்னெஞ்சத் தின்று.
௫

பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
அத்தமே யாக்கும்வந் தென்மனத்தை - அத்தன்
பெருந்துறையா னாட்கொண்டு பேரருளால் நோக்கு
மருந்திறவாப் பேரின்பம் வந்து.
௬

வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதா யமைந்தன்றே - சீரார்
திருத்தென் பெருந்துறையா னென்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி.
௭

யாவர்க்கு மேலா மளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை - யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் னெம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை.
௮

மூவரு முப்பத்து மூவரு மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான் - மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்ப மிகும்.
௯

இருந்தென்னை யாண்டா னிணையடியே சிந்தித்
திருந்திரந்து கொண்ணெஞ்சே யெல்லாந்—தருங்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவா யென்மனத்தே வந்து. க0

இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான்றுந்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியா—யன்பமைத்துச்
சீரார் பெருந்துறையா னென்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டா னுவந்து. கக

திருச்சிற்றம்பலம்.

திருப்பெருந்துறையில் அருளிய

# பண்டாய நான்மறை

## அனுபவத்துக் கையமின்மை யுரைத்தல்.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்
கண்டாரு மில்லைக் கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை. க

உள்ள மலமூன்று மாய வகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த—வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு. உ

காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிபாகன் நம்வினையை—வீட்டி
அருளும் பெருந்துறையா னங்கமல பாதம்
மருளுங் கெடநெஞ்சே வாழ்த்து. ந

வாழ்ந்தார்க ளாவாரும் வல்வினையை மாய்ப்பாருந்
தாழ்ந்துலக மேத்தத் தகுவாருஞ்—சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்துந் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்து நமர். ச

நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக்கரைசைப் — பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண். ௫

காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்
பேணு மடியார் பிறப்பகலக் — காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையி லென்றும்
பிரியானை வாயாரப் பேசு. ௬

பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின் மணியின் மணிவார்த்தை — பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தே னல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து. ௭

திருச்சிற்றம்பலம்.

தில்லையில் அருளிய

# திருப்படையாட்சி

---

## சிவோபாதி யொழிதல்.

பன்னிருசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கண்க ளிரண்டு மவன்கழல் கண்டு களிப்பன வாகாதே
காரிகையார்கள்தம் வாழ்விலென் வாழ்வு கடைப்படுமாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடு மாகாதே
மாலறி யாமலர்ப் பாத மிரண்டும் வணங்குது மாகாதே

பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே. ௧

ஒன்றினொடொன்றுமோரைந்தினொடைந்துமுயிர்ப்பறுமாகா[தே
உன்னடி யாரடி யாரடி யோமென வுய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கறு வாகாதே
காரண மாகும னாதி குணங்கள் கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்க நடந்தன வாகாதே
நாமுமெ லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே
என்றுமெ னன்பு நிறைந்த பராவமு தெய்துவ தாகாதே
ஏறுடையானெனையாளுடைநாயகனென்னுள்புகுந்திடிலே.

பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராவமு தாகாதே
அந்த மிலாத அகண்டமு நம்மு ளகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுட ரண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்க ளவன்றிரு மேனி திளைப்பன வாகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய வீச னெதிர்ப்படு மாயிடிலே. ௩

என்னணி யார்முலை யாக மளைந்துட னின்புறு மாகாதே
எல்லையின் மாக்கரு ணைக்கட லின்றினி தாடுது மாகாதே
நன்மணி நாத முழங்கியெ னுள்ளுற நண்ணுவ தாகாதே
நாத னணித்திரு நீற்றினை நித்தலு நண்ணுவ தாகாதே

மன்னிய அன்பரி லென்பணி முந்துற வைகுவ தாகாதே
  மாமறை யும்மறி யாமலர்ப் பாதம் வணங்குவ தாகாதே
இன்னியற் செங்கழு நீர்மல ரென்றலை யெய்துவ தாகாதே
  என்னை யுடைப்பெரு மானருளீச னெழுந்தருளப்பெறிலே.

மண்ணினின் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே
  வானவ ரும்மறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
கண்ணிலி காலமனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே
  காதல்செ யும்மடி யார்மன மின்று களித்திடு மாகாதே
பெண்ணலி யாமென நாமென வந்த பிணக்கறு மாகாதே
  பேறறி யாதவ னேகபவங்கள் பிழைத்தன வாகாதே
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை யெய்துவ தாகாதே
  என்னை யுடைப்பெரு மானருளீசனெழுந்தருளப்பெறிலே.

பொன்னிய லுந்திரு மேனிவெண்ணீறு பொலிந்திடு மாகாதே
  பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே
மின்னிய லுண்ணிடை யார்கள் கருத்து வெளிப்படு மாகாதே
  வீணை முரன்றெழு மோசையி லின்ப மிகுத்திடு மாகாதே
தன்னடி யாரடி யென்றலை மீது தழைப்பன வாகாதே
  தானடி யோமுட னேயுய வந்து தலைப்படு மாகாதே
இன்னிய மெங்கு நிறைந்தினி தாக வியம்பிடு மாகாதே
  என்னைமுனாளுடையீசனெனத்தனெழுந்தருளப்பெறிலே.

சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
  துண்ணெனவென்னுளமன்னியசோதிதொடர்ந்தெழுமாகாதே
பல்லியல் பாய் பரப்பற வந்த பராபர மாகாதே
  பண்டறி யாதபரானுப வங்கள் பரந்தெழு மாகாதே

வில்லிய னன்னுத லார்மய லின்று விளைந்திடு மாகாதே
விண்ணவ ரும்மறி யாத விழுப்பொரு ளிப்பொருளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை யெய்திடு மாகாதே
இந்து சிகாமணி யெங்களை யாள எழுந்தரு ளப்பெறிலே. எ

சங்கு திரண்டு முரன்றெழு மோசை தழைப்பன வாகாதே
சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனு மாயை யடங்கிடு மாகாதே
ஆசையெ லாமடி யாரடி யோமெனு மத்தனை யாகாதே
செங்கய லொண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பனவாகாதே
சீரடி யார்கள் சிவானு பவங்கள் தெரிந்திடு மாகாதே
எங்கு நிறைந்தமு தூறு பரஞ்சுட ரெய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோனெனை யாள எழுந்தரு ளப்பெறிலே.

திருச்சிற்றம்பலம்

---

தில்லையில் அருளிய

# ஆனந்தமாலை

---

## சிவானுபவ விருப்பம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மின்னே ரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனையமலர்கொண்டுபோற்றா நின்றா ரமரரெல்லாங்
கன்னே ரனையமனக்கடையாய்க்கழிப்புண்டவலக்கடல்வீழ்ந்த
என்னே ரனையே னினியுன்னைக் கூடும் வண்ண மியம்பாயே.

என்னா லறியாப் பதந்தந்தா யான தறியா தேகெட்டேன் [ன்
உன்னாலொன்றுங்குறைவில்லையுடையாயடிமைக்காரென்பே
பன்னா ளுன்னைப் பணிந்தேத்தும் பழைய அடிய ரொடுங்கூடா
தென்னா யகமே பிற்பட்டிங் கிருந்தேனோய்க்குவிருந்தாயே. ௨

சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி யறிவின்றித்
தோலின் பாவைக்கூத்தாட்டாய்ச்சுழன்றுவிழுந்துகிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா வுலக நெறியேறக்
கோலங் காட்டி யாண்டானைக் கொடியேனென்றோ கூடுவதே.

கெடுவேன்கெடுமாகெடுகின்றேன்கேடிலா தாய்பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாநான் பட்டாற்பின்னைப்பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கா னன்றோ எங்கள் நாயகமே. ௪

தாயாய் முலையைத தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தா னல்குதியே
தாயே யென்றுன் தாளடைந்தேன் தயாநீ யென்பாலில்லையே
நாயேனடிமையுடனாகஆண்டாய்நான்றான்வேண்டாவோ. ௫

கோவே யருள வேண்டாவோ கொடியேன்கெடவேயமையுமே
ஆவா வென்னா விடிலென்னை யஞ்சே லென்பா ராரோதான்
சாவா ரெல்லா மென்னளவோ தக்க வாறன் றென்னாரோ
தேவேதில்லை நடமாடீதிகைத்தே னினித்தான் தேற்றாயே. ௬

நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாநிகழ்வித்துப் [யாய்
பெரியதென்னன்மதுரையெல்லாம்பிச்சதேற்றும்பெருந்துறை
அரிய பொருளே யவிநாசி யப்பா பாண்டி வெள்ளமே
தெரிய வரிய பரஞ்சோதீ செய்வ தொன்று மறியேனே. ௭

திருச்சிற்றம்பலம்.

## தில்லையில் அருளிய

# அச்சோப்பதிகம்

## அநுபவவழி யறியாமை.

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமல மறிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்று மில்லாத கூத்தன்றன் கூத்தையெனக்
கறியும் வண்ண மருளியவா றார்பெறுவா ரச்சோவே.

பொய்யெல்லா மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. ௫

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி யெனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணலெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

பஞ்சாய வடிமடவார் கடைக்கண்ணா லிடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேனுன் னருள்பெற்றேன்
உய்ஞ்சேனா னுடையானே யடியேனை வருகவென்
றஞ்சேலென் றருளியவா றார்பெறுவா ரச்சோவே. ௭

வெந்துவிழு முடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழற் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறவென் துரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. ௮

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. ௯

சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியிற றடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றூர்பெறுவா ரச்சோவே. அ

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றூர்பெறுவா ரச்சோவே. கூ

திருச்சிற்றம்பலம்.

## திருவாசகம் முற்றிற்று.

ஆகத் திருப்பதிகங்கள் ருக-க்குப் பாடல் தொகை-கூருஅ.

# பாட்டு முதற்குறிப்பு அட்டவணை


| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| அங்கணனெ | ௧௮௪ | அருந்தவருக் | ௯௫ |
| அங்கியருக் | ௯௮ | அருமந்த | ௮௯ |
| அடர்புல | ௩௧ | அருளாதொ | ௧௨௨ |
| அடற்கரி | ௬௦ | அருளாரமுத | ௧௫௪ |
| அடியாரானி | ௧௮௮ | அருளுடை | ௧௩௮ |
| அடியார் | ௧௫௪ | அரைசனே | ௧௨௪ |
| அடியேனல்ல | ௧௫௭ | அரைசேபொன் | ௧௨௨ |
| அடியேனல்லே | ௪௮ | அரைசேய | ௬௦ |
| அட்டமூர்த்தி | ௧௭௯ | அரையாடு | ௮௯ |
| அணிமுடி | ௧௮௨ | அலரவனு | ௯௩ |
| அண்டப்பகுதி | ௧௨ | அல்லிக்கமல | ௧௩௯ |
| அண்ணாமலை | ௭௦ | அவமாய | ௮௮ |
| அதுபழச் | ௧௧௯ | அழகேபுரிங் | ௧௫௯ |
| அத்தனே | ௧௩௯ | அழிவின்றி | ௧௩௫ |
| அத்தியுரித் | ௯௯ | அழுகே | ௪௯ |
| அத்தேவர் | ௮௫ | அளவறு | ௩௮ |
| அப்பனே | ௫௨ | அளவிலாப் | ௧௫௩ |
| அம்பரமாம் | ௯௫ | அளித்து | ௧௩௦ |
| அம்பலத் | ௯௫ | அளிபுண் | ௧௩௪ |
| அம்மையே | ௧௩௮ | அறவேபெற் | ௧௫௫ |
| அயனையன | ௯௨ | அறவையே | ௧௪௯ |
| அயன்றலை | ௮௩ | அறிவனே | ௪௧ |
| அரிக்கும் | ௮௪ | அறிவிலா | ௩௮ |
| அரியானே | ௩௩ | அறுகெடு | ௭௮ |
| அருணனிக் | ௧௧௮ | அறுக்கிலே | ௧௨௯ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| அறையோ | ௧௯௨ | இப்பாடே | ௧௧[illegible] |
| அன்பராகி | ௧௨௮ | இப்பிறப்பி | ௧௭௭ |
| அன்பினு | ௧௨௪ | இயக்கிமாரறு | ௧௫௧ |
| அன்றுலநீழ | ௯௮ | இரங்குநம | ௧௨௨ |
| அன்றையெ | ௧௫௮ | இராந்திரங் | ௧௨௫ |
| அன்னையி | ௧௯ | இருகை | ௪0 |
| ஆடரப்பூ | ௧௧0 | இருள்திணிந் | ௧௩௮ |
| ஆடுகின்றிலை | ௩௮ | இருதலைக் | ௫௫ |
| ஆட்டின் | ௧0௨ | இருந்தென்னையாண்டா | ௧௯௩ |
| ஆட்டுத்தேவர் | ௧௨௮ | இருந்தென்னையாண்டு | ௫௭ |
| ஆணைவலி | ௧0௮ | இருப்பு | ௪௭ |
| ஆதமிலி | ௧௭௧ | இரும்பு | ௧௭௧ |
| ஆதியுமந்தமு | [illegible]௪ | இல்லை | ௫௧ |
| ஆமாறுன் | ௩௩ | இழித்தன | ௪௫ |
| ஆயநான் | ௩௫ | இன்பந் | ௧௧௩ |
| ஆயமொழி | ௧௧௬ | இன்பம் | ௧௯௩ |
| ஆர்க்கோ | ௧௯௬ | இன்பான் | ௧௧[illegible] |
| ஆர்த்தபிறவி | ௬௮ | இன்றெனக் | ௧௨௩ |
| ஆவகைநாமு | ௮௨ | இன்னிசை | ௧௧௮ |
| ஆவாதிரு | ௧0௧ | ஈசனைநீ | ௪௭ |
| ஆவா அரி | ௮௯ | ஈசனேயென் | ௪௨ |
| ஆற்றகில்லே | ௧௩௯ | ஈண்டிய | ௧௬௫ |
| ஆனையாய்க் | ௭௫ | ஈரம்பு | ௧00 |
| ஆனைவெம் | ௫௮ | உகந்தானே | ௧௨௧ |
| இடக்குங் | ௧௭௫ | உங்கையிற் | ௭[illegible] |
| இணையார் | ௯௬ | உடையநா | ௫௨ |
| இத்திரனு | ௭௨ | உடையாளு | ௧௨[illegible] |
| இந்திரிய | ௧௫௨ | உடையானே | ௪௩ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| உணர்ந்த | ௧௨௪ | எண்ணுடை | ௧0௫ |
| உண்டொ ர | ௪0 | எந்தையா | ௪௧ |
| உண்ணப் | ௧0௨ | எந்தையெ | ௯[illegible] |
| உத்தமனத்த | ௩0 | எம்பிரா | ௪௫ |
| உம்பர் | ௧௬௭ | எய்தலா | ௪௭ |
| உய்யவில்லா | ௧0௧ | எய்த்தே | ௧௩௪ |
| உரியேன | ௧௮௫ | எரிமூன்று | ௯௭ |
| உருகிப்பெ | ௯0 | எறம்பிடை | ௫௮ |
| உருத்தெரியா | ௧௫௨ | எனைநானெ | ௧௬0 |
| உரைமாண்ட | ௧0௬ | என்பாலைப் | ௧௭௨ |
| உலக்கை | ௭௯ | என்புள்ளுரு | ௧௭௪ |
| உலவாக் | ௪௨ | என்பே | ௧௮௬ |
| உவலைச் | ௯௩ | என்றும் | ௧0௪ |
| உழிதரு | ௩௧ | என்னணி | ௧௯௬ |
| உழைதரு | ௬௨ | என்னப்ப | ௯௨ |
| உள்ளப் | ௮௭ | என்னாலறியா | ௧௯௯ |
| உள்ளமல | ௧௯௪ | என்னை | ௫௭ |
| உள்ளன | ௫௮ | ஏகாச | ௧0௩ |
| உற்றஆக் | ௧௩௭ | ஏசாநிற்ப | ௧௨௨ |
| உற்றாரை | ௧௭௩ | ஏசினும்யா | ௬௩ |
| உன்னற்கரியசீரு | ௧௧௧ | ஏதமிலா | ௧௧௫ |
| உன்னற்கரியதிரு | ௧0௯ | ஏய்ந்த | ௧௭௬ |
| உன்னையுகப் | ௧௧௩ | ஏராரிளங் | ௧௧௫ |
| ஊசலாட்டு | ௧[illegible]௮ | ஏர்தரு | ௧[illegible]௨ |
| ஊனாயுயிரா | ௭௫ | ஏழைத்தொ | ௧0௬ |
| எங்கணாயக | ௧௪௭ | ஏனையாவ | ௩௯ |
| எச்சம்மறிவே | ௧௬௧ | ஐயநின் | ௪௬ |
| எண்ணிலே | ௧௩௭ | ஒள்நித்தி | [illegible] |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம் |
|---|---|---|---|
| ஒண்மை | ௫௮ | கலந்துநின் | ௧௫௪ |
| ஒப்புனக் | ௧௬௮ | கல்லாதபுல் | ௧௫௨ |
| ஒருவ | ௪௫ | கல்லாமன | ௭௨ |
| ஒன்றாய் | ௮௫ | களிவந் | ௫௬ |
| ஒன்றினை | ௧௯௬ | கள்வன்கடி | ௮௭ |
| ஒன்றும்போ | ௧௫௭ | கறங்கோலை | ௮௯ |
| ஒடுங்கவந் | ௧௭௪ | கற்போலு | ௧௦௪ |
| ஓயாதே | ௭௩ | கற்றறியேன் | ௧௭௨ |
| ஓய்விலா | ௩௯ | கனவேயுந் | ௯௦ |
| ஓரொருகா | ௯ | கன்னூரித்த | ௮௯ |
| கடகரியும் | ௯௪ | காசணி | ௭௮ |
| கடலினு | ௫௬ | காட்டகத்து | ௧௯௪ |
| கடலின்றிரை | ௧௩௦ | காணலாம் | ௪௦ |
| கடலேயனைய | ௧௫௫ | காணுங் | ௧௯௫ |
| கடவுளே | ௪௪ | காணும | ௪௮௬ |
| கடையவ | ௫௪ | காணுமா | ௪௮ |
| கட்டறு | ௪௧ | காதார் | ௬௮ |
| கண்களிர | ௧௯௫ | காப்பாய் | ௧௪௧ |
| கண்டது | ௬௦ | காமனுட | ௧௦௬ |
| கண்ணனே | ௧௧௦ | காருடைப் | ௧௧௪ |
| கண்ணனப் | ௮௪ | காருறு | ௫௪ |
| கண்ணார் | ௧௫௮ | காணார்புலித் | ௯௪ |
| கதியீடி | ௬௧ | கிஞ்சுக | ௧௧௬ |
| கமலநான் | ௧௪௭ | கிளியனார் | ௧௬௨ |
| கயன்மாண் | ௯௦ | கிளிவந்த | ௭௬ |
| கரணங்க | ௮௫ | கிற்றவா | ௩௮ |
| கருடக்கொடி | ௧௩௩ | கீதமினிய | ௧௧௨ |
| கருவாயுல | ௮௬ | குஞ்சுது | ௬௦ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| குலங்க | ௫௯ | கோவே | ௧௯௯ |
| குலம்பாடி | ௯௧ | கோழிசிலம்ப | ௬௬ |
| குழைத்தாற் | ௧௫௭ | கோற்றேனை | ௧௬௧ |
| குறியுநெறி | ௧௭௪ | கோற்றேன் | ௧௧௬ |
| குறைவிலா | ௧௨௫ | சங்கமரற்றச் | ௮௧ |
| கூடிக்கூடி | ௧௫௬ | சங்கரா | ௪௪ |
| கூவின | ௧௧௮ | சங்கு | ௧௯௮ |
| கூறுநாவே | ௧௫௮ | சச்சை | ௫௯ |
| கூற்றை | ௧௬[illegible] | சடையா | ௧௭௩ |
| கெடுவேன் | ௧௯௯ | சட்டோலினை | ௮௫ |
| கேட்டாயோ | ௭௨ | சதுரை | ௧௬௪ |
| கேட்டாரு | ௩௬ | சந்திரனை | ௭௫ |
| கையார் | ௭௪ | சலமுடைய | ௯௫ |
| கையாற் | ௧௩௪ | சாடியவே | ௧0௧ |
| கொந்தணவு | ௧௧௪ | சாதல் | ௨0௨ |
| கொம்பரி | ௫௭ | சாதிகுலம் | ௧௫௩ |
| கொம்பிலரு | ௧௭௫ | சாவமுன் | ௩௧ |
| கொம்மை | ௧௭௬ | சித்தமேபுகு | ௧௮0 |
| கொழுமணி | ௫௯ | சிந்தனை | ௩௬ |
| கொள்ளு | ௪௧ | சிந்தை | ௪௭ |
| கொள்ளோர் | ௫௪ | சிரிப்பார் | ௧௨௨ |
| கொள்ளேன் | ௩0 | சிரிப்பிப்ப | ௬௩ |
| கொன்றை | ௧௧௨ | சீரார்திரு | ௯௯ |
| கோணிலா | ௧௬௪ | சீரார்பவ | ௧0௭ |
| கோயில்சுடு | ௯௨ | சீலமின்றி | ௧௯௧ |
| கோலமேனி | ௧௫௧ | சீவார்ந்தீ | ௧௩௪ |
| கோலவரை | ௧0௯ | சுடர்பொற் | ௧௩௮ |
| கோலாலமா | ௯௩ | சுந்தரத் | ௧௩ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| சுந்தரநீ | எஅ | தக்கனையு | கூ |
| சுருள்புரி | கரு௨ | தச்சுவிடு | க௦௦ |
| சூடகந்தோ | எகூ | தந்ததுன் | க௨ங |
| சூடுவேன் | எரு | தரிக்கிலே | சச |
| சூரியனுர் | க௦௨ | தவமே | ருக |
| செங்கணெடு | எக | தறிசெறி | ககரு. |
| செங்கணவ | சுகூ | தனித்து | ஙக |
| செடியாராக் | கருரு | தனியனேன் | ருங |
| செப்பார் | எச | தன்மை | சரு |
| செம்மை | ௨௦௨ | தாதாடு | ககரு |
| செய்த | ககூக | தாதாய்மூவே | கசக |
| செய்யவாய் | ககரு | தாமே | கஅஅ |
| செய்வதறி | ச௨ | தாயாய் | ககூகூ |
| செல்வநல் | சக | தாரகை | ங௨ |
| செழிகின் | ருரு | தாராயு | சகூ |
| செழுக்கமல | கருக | தாராஅருளொ | கருரு |
| செறியுமி | கஎஅ | தாளியறுகி | ககக |
| செறியும் | கசுரு | தானந்தமில் | கூச |
| சேரக்கருதி | கஅகூ | திகழத்திகழு | கச௦ |
| சொல்லிய | ககூஎ | திண்போர் | கூகூ |
| சோதியாய் | க௨சு | திருந்துவார் | கசகூ |
| சோதியே | கசசு | திருமாலும் | அஅ |
| சோலைப்ப | ககஎ | திருவார் | அஅ |
| ஞாலமிந்தி | கரு௦ | தில்லைமூதூர் | சு |
| ஞானக்கரு | அ௨ | தினைத்தனை | அச |
| ஞானவா | கச௦ | தீதில்லை | க௦ரு |
| தகைவிலா | ககரு | தீர்க்கின் | ருரு |
| தக்கன | க௦௨ | தீர்ந்தவுன் | சரு |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| துடிகொ | ௧௪௭ | நல்லமலரி | ௧0௩ |
| துடியேரிடு | ௧௭௪ | நன்றாக | ௯௫ |
| துணியாவரு | ௧௫௫ | நாடகத்தா | ௩௨ |
| துண்டப் | ௭௩ | நாதமுடைய | ௧௮௩ |
| துப்பனே | ௧௪௮ | நாமகஞ்சி | ௧0௨ |
| தூவெள் | ௧௮௪ | நாயிற்கடைப் | ௯௧ |
| தெங்குலவு | ௧0௯ | நாயிற்கடையா | ௧௫௮ |
| தென்பாலுகந் | ௯௩ | நாயேனை | ௮௯ |
| தேரைநிறுத்தி | ௧0௩ | நானாடி | ௧௫௧ |
| தேவதேவன் | ௧௭௯ | நானொன் | ௮௪ |
| தேவர்கோ | ௩௭ | நானுமென் | ௮௯ |
| தேனகமா | ௮௨ | நானேயோ | ௧௭௩ |
| தேனுடுகொ | ௯௭ | நான்மறை | ௧0௨ |
| தேனைப் | ௪௩ | நான்முகன் | ௨0 |
| தேன்பழச் | ௧௧௩ | நான்தனக் | ௮௯ |
| தேன்புக்க | ௯௪ | நித்தமணு | ௧௧0 |
| தையலார் | ௨0௧ | நிருத்தனே | ௧௪௯ |
| தையலோர் | ௧௧௧ | நிலநீர் | ௧0௫ |
| தொண்டர்காள் | ௧௯0 | நினைப்ப | ௪௭ |
| தோலுந் | ௮௭ | நினையப்பிற | ௧௪0 |
| நங்காயிதெ | ௯௪ | நிற்பார் | ௧௮௮ |
| நங்கைமீர | ௧௭௯ | நீக்கிமுன் | ௩௭ |
| நஞ்சமர் | ௧0௮ | நீண்டகர | ௧௯ |
| நடித்து | ௧௭௭ | நீண்டமாலு | ௧௩௯ |
| நண்ணிப் | ௧௧௫ | நீதியாவன | ௧௩௯ |
| நமச்சிவாய | ௧ | நீரின்பவெ | ௧௯௫ |
| நரியை | ௨00 | நீலவுரு | ௧௯௩ |
| நல்லா | ௧௨௩ | நெக்குநெக் | ௧௪௧ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| நெடுந்த | ௫௬ | பருவரை | ௧௬௪ |
| நெறிசெய் | ௯௭ | பவனெம் | ௩௧ |
| நெறியல்லா | ௨௦௦ | பழிப்பிணி | ௬௨ |
| நோயுற்று | ௮௬ | பழியில்தொல் | ௧௪௫ |
| பங்கயமா | ௧௦௬ | பற்றுங்கவை | ௧௬௦ |
| பச்சைத்தா | ௧௭௧ | பன்னுட்பாவி | ௯௭ |
| பஞ்சாய | ௧௭௨ | பாங்கினொடு | ௧௫௩ |
| பஞ்சாயவடி | ௨௦௧ | பாசம்பரஞ் | ௬௪ |
| பஞ்சின்மெல் | ௧௪௪ | பாசவே | ௧௬௯ |
| படமாக | ௯௮ | பாடவே | ௫௩ |
| பணிவார் | ௪௯ | பாடிமால்புக | ௧௪௩ |
| பண்சுமந் | ௭௩ | பாடிற் | ௬௨ |
| பண்டாய | ௧௯௪ | பாதாள | ௬௭ |
| பண்பட்ட | ௯௬ | பாரார்விசு | ௭௧ |
| பண்ணார்ந் | ௧௭௧ | பாருருவாய | ௧௮௫ |
| பண்ணினேர் | ௧௪௩ | பாரொடு | ௧௪௨ |
| பத்தர்சூழப் | ௧௮௦ | பாரோர் | ௧௩௪ |
| பத்திமை | ௧௫௩ | பார்பது | ௧௨௬ |
| பத்திலனே | ௧௮௬ | பார்பாடு | ௯௦ |
| பத்தணைவிர | ௧௪௪ | பார்ப்பதி | ௧௦௧ |
| பத்துவிகார | ௧௬௬ | பாலகனார்க் | ௧௦௨ |
| பப்பதி | ௧௧௯ | பாலுமமுத | ௯௮ |
| பரந்துபல் | ௩௧ | பாவகாசா | ௧௪௫ |
| பரம்பர | ௯௦ | பாழ்ச்செய் | ௧௭௫ |
| பரவுவா | ௩௯ | பாற்றிரு | ௧௮௭ |
| பரவுவாரவர் | ௧௩௭ | பால்வினைக் | ௧௭௦ |
| பரிந்துவந்து | ௧௪௦ | பிட்டுநேர்பட | ௧௫௦ |
| பரிதிவாழொ | ௧௪௪ | பிணக்கிலாத | ௧௫௦ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| பிணியெலா | ௧௬௩ | பூதங்க | ௧௧௯ |
| பித்தனென் | ௧௩௬ | பூதங்களை | ௧௫௩ |
| பித்தென்னை | ௧௯௨ | பூத்தாரும் | ௧௦௪ |
| பிரமனரி | ௧௦௬ | பூமேலயனே | ௮௭ |
| பிறவிதனை | ௧௫௩ | பூவலர் | ௧௮௪ |
| பிறவியென் | ௧௮௦ | பூவார் | ௧௮௭ |
| பிறிவறியா | ௧௩௨ | பூவியல் | ௭௭ |
| புகவேதகேனுனக் | ௩௨ | பூவேறு | ௮௪ |
| புகவேவேண்டா | ௧௮௮ | பெருநீரற | ௫௮ |
| புகழ்மின் | ௧௮௮ | பெருமான் | ௧௮௯ |
| புகுவதா | ௩௯ | பெரும்பெரு | ௧௩௧ |
| புகுவே | ௪௩ | பெற்றது | ௫௮ |
| புணர்ப்ப | ௪௬ | பெற்றிபிறர்க் | ௭௬ |
| புத்தன்புரங் | ௯௧ | பேசப்பட் | ௪௮ |
| புத்தன்மு | ௧௦௫ | பேசிற்று | ௩௫ |
| புரந்தரனு | ௧௦௧ | பேசும் | ௧௯௫ |
| புரள்வார் | ௧௮௯ | பேதமில்ல | ௧௫௧ |
| புலன்கடி | ௫௯ | பேராசை | ௯௮ |
| புலையனே | ௧௨௮ | பேருங்குண | ௧௭௫ |
| புவனியிற் | ௧௨௦ | பைங்குவ | ௬௮ |
| புழுவினுற் | ௧௮௦ | பைந்நாப்ப | ௧௫௯ |
| புறமே | ௪௯ | பொச்சை | ௧௭௮ |
| புற்றில்வா | ௧௬௨ | பொதும் | ௬௦ |
| புற்றும்மாய் | ௧௨௭ | பொத்தை | ௧௩௭ |
| புன்புலால் | ௧௭௦ | பொய்யவ | ௫௫ |
| பூங்கமல | ௧௭௩ | பொய்யனே | ௧௨௭ |
| பூசுவதும் | ௯௨ | பொய்யாய | ௮௭ |
| பூணெணைத | ௧௫௦ | பொய்யெல் | ௨௦௧ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| பொருட்ப | க0ச |
| பொருத்த | ரு0 |
| பொருந்து | கஎஎ |
| பொருளே | ருஎ |
| பொலிகின் | ருசு |
| பொழிகின்ற | க௩க |
| பொன்னிய | ககூஎ |
| போகம் | சசு |
| போதுசேரய | கஉகூ |
| போரேறே | சஉ |
| போற்றியரு | எ0 |
| போற்றியிப் | சரு |
| போற்றியென்போ | சச |
| போற்றியென்வாழ் | ககஎ |
| போற்றியென்றும் | ச0 |
| போற்றியோ | சச |
| மஞ்சுலா | கசு௩ |
| மடங்க | ருஎ |
| மண்ணதனிற் | உ0க |
| மண்ணினின் | ககூஎ |
| மணிக்குங் | கஎரு |
| மத்துறு | ருகூ |
| மருவினிய | கஎஉ |
| மருளனேன் | கசகூ |
| மலங்கினேன் | கரு0 |
| மலைமகளை | கூ௩ |
| மலையரை | கூச |
| மன்னவ | சுஉ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| மன்னஎம்பி | ருஉ |
| மறுத்த | ருரு |
| மாடுஞ்சு | கஎஎ |
| மாடுநகை | அ0 |
| மாதாடு | க0அ |
| மாதிவர் | கஅக |
| மாயவாழ்க் | கஅ0 |
| மாயவனப் | கசுரு |
| மாயனே | கஉகூ |
| மாலயன் | கஅஉ |
| மாலறியா | சுரு |
| மாலேபிரம | கூ0 |
| மாவடுவகிர் | க௩உ |
| மாவார | கூகூ |
| மாழைமை | க௩உ |
| மாறிநின்றென்னை | ௩அ |
| மாறிநினைறென் | கஉ௩ |
| மாறிலா | ரு0 |
| மாறுபட் | ருசு |
| மானமழிந் | க0ரு |
| மானேநீ | சுசு |
| மானேர்நோக்கிம | கருஎ |
| மானேர்நோக்கியுடை | சஅ |
| மானேர் நோக்கியுமை | சஉ |
| மானேர்பங்கா | கருசு |
| மிடைந்தெ | க௩ச |
| மின்கணி | க௩உ |
| மின்னிடை | கூஅக |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| மின்னோர | ககஅ | மேவுமுன்ற | கருரு |
| முடித்த | சங | மைப்பொலி | எச |
| முதலே | சுக | மையயர் | அக |
| முத்தணி | அ0 | மையலா | கஎசு |
| முத்தனே | கசஅ | மையிலங் | ரு0 |
| முத்தனை | கஅக | மொய்ப்பா | கஙங |
| முத்தன்ன | சுரு | மொய்யார் | சுஎ |
| முத்திக்குழ | கூ0 | யாவர்க்கு | ககூஉ |
| முத்திநெறி | உ00 | யானேதும் | ஙஉ |
| முத்துநற்றும | எஎ | யானேபொ | சகூ |
| முந்தியமுத | கஉ0 | வட்டமலர் | அங |
| முழுதயில் | சுஉ | வணங்கத் | கூஎ |
| முழுமுதலே | கஉக | வணங்குநி | [illegible] |
| முழுவதுங் | ஙக | வணங்குமி | கஎஎ |
| முன்னுய | கூகூ | வண்ணங் | ஙரு |
| முன்னுனை | எசு | வந்திமை | கஅங |
| முன்னிக் | சுகூ | வம்பனுய்த் | கஅக |
| முன்னின்று | கஉக | வம்பனேன் | கசஉ |
| முன்னீறு | க0எ | வருந்துவ | ஙஉ |
| முன்னைப் | சுஎ | வலைத்தலை | சுக |
| முன்னையெ | கஙசு | வல்லைவா | கசங |
| முன்னைவி | ககூக | வழங்குகின் | கஙங |
| மூத்தானே | கஎஉ | வளர்கின் | ருச |
| மூவரு | ககூஉ | வளைந்தது | 500 |
| மூண்டறங் | க0எ | வன்புலால் | க[illegible]உ |
| மெய்தா | ங0 | வன்னெஞ் | அசு |
| மெய்யனே | கசஅ | வாட்டடங் | எகூ |
| மேலைவா | ச0 | வாராவழி | ககூஉ |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
| --- | --- | --- | --- |
| வாவிங் | ௧௧௩ | வினையென் | ௩௯ |
| வாழ்கின்றாய் | ௩௪ | வெஞ்சின | ௧௦௧ |
| வாழ்த்துவ | ௩௩ | வெஞ்சேலனைய | ௧௩௫ |
| வாழ்ந்தார் | ௧௯௪ | வெந்து | ௨௦௧ |
| வாளுலா | ௧௬௩ | வெய்யவ | ௧௦௫ |
| வானநா | ௫௧ | வெய்யவி | ௧௯௧ |
| வானவன் | ௯௮ | வெருவரேன் | ௧௬௨ |
| வானுகி | ௩௩ | வெள்ளத் | ௫௬ |
| வான்கெட் | ௯௧ | வெள்ளந் | ௩௪ |
| வான்பாவிய | ௧௬௧ | வெள்ளைக் | ௧௧௧ |
| வான்வந்த | ௭௨ | வெறுப்பன | ௧௩௧ |
| விச்ச | ௫௧ | வேடுருவாகி | ௧௮௨ |
| விச்சுக் | ௪௮ | வேண்டத்த | ௧௩௮ |
| விச்சைதா | ௩௭ | வேண்டுகின் | ௪௬ |
| விடுமின் | ௧௮௮ | வேண்டேன் | ௧௬௦ |
| விடைவிடா | ௧௬௭ | வேதமும் | ௮௩ |
| விண்ணகத் | ௧௨௦ | வேதமொ | ௧௧௦ |
| விண்ணு | ௭௪ | வேவத் | ௧௮௩ |
| விண்ணோர் | ௯௧ | வேனில்வேள்கணை | ௩௯ |
| விரவிய | ௧௬௬ | வேனில்வெண்மலர்க் | ௩௩ |
| வினைக்கேடரு | ௧௬௦ | வைத்தநிதி | ௮௫ |
| வினைப்பிறவி | ௧௫௨ | வைப்புமா | ௧௩௬ |
| வினையிலே | ௩௪ | வையக | ௮௦ |

# பதிக அட்டவணை.


| பதிகம். | பக்கம். | பதிகம். | பக்கம். |
|---|---|---|---|
| அச்சப்பத்து | ௧௬௨ | சதகம் | ௩௦ |
| அச்சோப்பதிகம் | ௨௦௦ | சாழல் | ௯௨ |
| அடைக்கலப்பத்து | ௧௩௧ | சிவபுராணம் | ௧ |
| அண்டப்பகுதி | ௧௨ | செத்திலாப்பத்து | ௧௨௭ |
| அதிசயப்பத்து | ௧௩௬ | சென்னிப்பத்து | ௧௭௯ |
| அம்மானை | ௭௧ | தசாங்கம் | ௧௧௫ |
| அருட்பத்து | ௧௪௬ | தெள்ளேணம் | ௨௨ |
| அற்புதப்பத்து | ௧௭௬ | தோணோக்கம் | ௧௦௪ |
| அன்னைப்பத்து | ௧௧௦ | நீத்தல்விண்ணப்பம் | ௫௪ |
| ஆசைப்பத்து | ௧௩௩ | படையாட்சி | ௧௯௫ |
| ஆனந்தமாலை | ௧௯௨ | படையெழுச்சி | ௧௯௦ |
| உந்தியார் | ௧௦௦ | பண்டாயநான்மறை | ௧௯௪ |
| உயிருண்ணிப்பத்து | ௧௫௯ | பள்ளியெழுச்சி | ௧௧௭ |
| எண்ணப்பதிகம் | ௧௮௫ | பாண்டிப்பதிகம் | ௧௬௪ |
| எம்பாவை | ௬௪ | பிடித்தபத்து | ௧௬௭ |
| ஏசறவு | ௧௭௧ | பிரார்த்தனைப்பத்து | ௧௫௪ |
| கண்டப்பத்து | ௧௫௨ | புணர்ச்சிப்பத்து | ௧௩௮ |
| கழுக்குன்றப்பதிகம் | ௧௫௦ | புலம்பல் | ௧௭௩ |
| கீர்த்தித்திருவகவல் | ௬ | பூவல்லி | ௯௬ |
| குயிற்பத்து | ௧[illegible]௨ | பொற்சுண்ணம் | ௭௭ |
| குலாப்பத்து | ௧௭௪ | பொன்னூசல் | ௧௦௭ |
| குழைத்தபத்து | ௧௫௭ | போற்றித்திருவகவல் | ௨௦ |
| கோத்தும்பி | ௮௪ | யாத்திரைப்பத்து | ௧௮௭ |
| கோயிற்றிருப்பதிகம் | ௧௨௩ | வார்த்தை | ௧௮௧ |
| கோயின்மூத்ததிருப் பதிகம் | ௧௨௧ | வாழாப்பத்து | ௧௪௨ |
| | | வெண்பா | ௧௯௧ |

# ஸ்தல அட்டவணை.


| ஸ்தலம். | பக்கம். |
|---|---|
| உத்தரகோசமங்கை ... ... ... | ௫௪ |
| திருக்கழுக்குன்றம் ... ... ... | ௧௫௦ |
| திருத்தோணி ... ... ... | ௧௬௭ |
| திருப்பெருந்துறை | ௧, ௩௦, ௧௧௭, ௧௨௭, ௧௩௧, ௧௩௩, ௧௩௬, ௧௩௮, ௧௪௨, ௧௪௬, ௧௫௪, ௧௫௭, ௧௫௯, ௧௬௪, ௧௭௧, ௧௭௬, ௧௭௯, ௧௮௧, ௧௯௧, ௧௯௪. |
| திருவண்ணாமலை ... ... ... | ௬௪, ௭௧ |
| திருவாரூர் ... ... ... | ௧௭௩ |
| தில்லை ... | ௬, ௧௨, ௨௦, ௭௭, ௮௪, ௮௮, ௯௨, ௯௬, ௧௦௦, ௧௦௪, ௧௦௭, ௧௧௦, ௧௧௨, ௧௧௫, ௧௨௧, ௧௨௩, ௧௫௨, ௧௬௨, ௧௭௪, ௧௮௫, ௧௮௭, ௧௯௦, ௧௯௫, ௧௯௮, ௨௦௦. |

சிவமயம்.

# மாணிக்கவாசக சுவாமிகளைப் போற்றும் பாடல்கள்.

---

[சிவப்பிரகாச சுவாமிகள் அருளியது.]

## அகவல்.

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட
காரண னுரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவி ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர் காண்கிலேம்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே. க

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே.

கடனிற வண்ணன் கண்மெனுன நடந்து
மறைச்சிலம் பாற்று மலரடி கணியப்
பரிதி கொடுத்த சுருதிநா யகற்கு
மூடிவிளக் கெரித்தும் கடிமலர்க் கோதைச்
சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்தும்
அருமக னறும்பூங் கருமயி ருதவியும்
நென்மூளை வாரி யின்னமு தருத்தியுங்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும்
அகப்படு மணிமீ னரற்கென விடுத்தும்
பூட்டி யரிவா ளூட்டி யரிந்துந்
தலையுடை யொளிக்குஞ் சிலையிடை மோதியும்
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்துந்
தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றுங்
குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்
பூக்கொளு மாதர் மூக்கினை யரிந்தும்
இளமூலை மாதர் வளமை துறந்தும்
பலன்டைநா ளொருசிலர் தொண்ட ராயினர்
செங்கண்மால் தடக்கையிற் சங்க நாண
முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூ.ரன்ப

பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டும்
நின்னைத் தொண்ட னென்னக் கொண்டனன்
இருக்கு மடுக்க லரக்க னெடுப்ப
முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமகள் தழுவ மனமகிழ் வோனே.

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடல்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
திருவா சகமெனும் பெருநீ ரொழுகி
ஓதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
உளமெனு நிலம்புக வூன்றிய அன்பாம்
வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே.

வேண்டு நின்னடியார் மெய்யன் பெனக்கும்
அருள்செய் சிவனே யலந்தே னந்தோ
முறையோ முறையோ இறையோ னேயென்
றழுது செம்பொ னம்பலக் கூத்தன்

அருளாற் பெற்ற அன்பினி லொருசிறி
தடிய னேற்கு மருளல் வேண்டும்
நீயே கோட னின்னருட் பெருக்கிற்
கேற்ற தன்றிள வேறுகந் தேறியைப்
பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக
திருந்திய வேதச் சிரப்பொருண் முழுதும்
பெருந்துறை யிடத்துப் பெருஞ்சீர்க்
குருந்துறு நீழலிற் கொள்ளைகொள் வோயே.

நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ
மனநின் றுருக்கு மதுர வாசக
கலங்குறு புலனெறி விலங்குறு வீர
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனு முணரா னெனத்தான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணும்
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பி னென்று விழிப்பி னெரியும்
ஆயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனாற்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி யறியா என்பணி வானே.

பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே

பேயேன் பெறுது பெற்றுற் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே
அன்னமாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப வாத லாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனுர்
“நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மில” ரெனுஞ்
செஞ்சொற் பொருளின் மேற்றறிந் தேனே. ௭

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நிழல்வா யுண்ட நிகரிலா னந்தத்
தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரு மோது மியற்கைத் தாதலிற்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கு மதுர வாசகம்
ஓதின் முத்தி யுறுபயன்
வேத மோதின் மெய்ப்பய னறமே. ௮

தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே.

செய்ய வார்சடைத தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே. ௧௦

உ

சிவமயம்.

# ஆளுடையவடிகள் அருள்மாலை.

[வடலூர். இராமலிங்க சுவாமிகள் அருளியது.]

தாவுக்கொச்சகக் கலிப்பா.

தேசகத்தி லினிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே யானந்த வடிவான மாதவனே
மாசகன்ற நீதிருவாய் மலர்ந்ததமிழ் மாமறையின்
ஆசகன்ற வனுபவநா னனுபவிக்க வருளுதியே.

கருவெளிக்குட் புறனாகிக் கரணமெலாங் கடந்துநின்ற
பெருவெளிக்கு நெடுங்காலம் பித்தாகித் திரிகின்றோர்
குருவெளிக்கே நின்றுழலக் கோதறநீ கலந்ததனி
உருவெளிக்கே மறைபுகழு முயர்வாத வூர்மணியே. உ

மன்புருவ நடுமுதலா மனம்புதைத்து நெடுங்காலம்
என்புருவாய்த் தவஞ்செய்வா ரெல்லாரு மேமாக்க
அன்புருவம் பெற்றதன்பின் னருளுருவ மடைந்துபின்னர்
இன்புருவ மாயினைநீ யெழில்வாத வூரிறையே. ங

உருவண்டப் பெருமறையென் றுலகமெலாம் புகழ்கின்ற
திருவண்டப் பகுதியெனுந் திருவகவல் வாய்மலர்ந்த
குருவென்றெப் பெருந்தவருங் கூறுகின்ற கோவேநீ
யிருவென்றத் தனியகவ லெண்ணமெனக் கியம்புதியே.

தடுகின்ற வானந்தச் சிற்சபையிற் சின்மயமா
டுகின்ற சேவடிக்கீ ழாடுகின்ற வாரமுதே
டுகின்ற வாதவூர் நாயகனே நாயடியேன்
டுகின்ற வாட்டமெலாம் வந்தொருகான் மாற்றுதியே.

சேமமிகுந் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே நீயுரைத்த வாசகத்தை யெண்ணுதொறுங்
ரமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற
மமுறு கற்புடையா ளின்பினுமின் பெய்துவதே.

ான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
ன்கலந்து பாடுங்கா னற்கருப்பஞ் சாற்றினிலே
தன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாம லினிப்பதுவே. எ

ருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில் [தத
ருமொழியே யென்னையுமென் னுடையனையு மொன்றுவித்
ருமொழியா மென்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
ருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே. அ

பெண்சுமந்த பாகப் பெருமா னொருமாமேல்
எண்சுமந்த சேவகன்போ லெய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றதுமோர் மாறன் பிரம்படியாற்
புண்சுமந்து கொண்டதுநின் பொருட்டன்றோ புண்ணியனே

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலங்கு நானடைதல் வியப்பன்றே.

---

பி. ஷண்முகம் அண்டு கோ.
அச்சுக்கூடம்
௬௬, வாலாஜா ரோட்டு, மதராஸ்.